வராகக்ஷேத்திரமாகிய

# ஸ்ரீவில்லிபுத்தூர்

# ஸ்தலபுராணம்.

ஸ்ரீ வில்லிபுத்தூர் இந்து ஹைஸ்கூல்
மாஜி ஹெட்மாஸ்டர். ம-ா-ா-ஸ்ரீ,
S. A. திருமலைக்கொழுந்து பிள்ளை B. A.
அவர்களாலியற்றப்பட்டு,



ஸ்ரீ வில்லிபுத்தூர் புக்ஷாப்
T. சுப்பிரமணிய பிள்ளை அவர்களால்
பதிப்பிக்கப்பட்டது.

ரைட்] 1924. [விலை அணா 8.

மு.ரு.அண்ணாமலை.

உ

ஸ்ரீராமஜெயம்.

வராகக்ஷேத்திரமாகிய

# ஸ்ரீவில்லிபுத்தூர் ஸ்தலபுராணம்.



ஸ்ரீ வில்லிபுத்தூர் இந்து ஹைஸ்கூல்

மாஜி. ஹெட்மாஸ்டர். ம-௱-௱ஸ்ரீ,

S. A. திருமலைக்கொழுந்து பிள்ளை B.A.

அவர்களால்

இயற்றப்பட்டு

ஸ்ரீ வில்லிபுத்தூர் புக்ஷாப்

T. சுப்பிரமணிய பிள்ளையவர்களால்

சென்னை-சூளை,

ஸ்ரீ "பாரதி" அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பெற்றது.

ரிஜிஸ்டர் காபிரைட்] 1924. [விலை அணா 8

## ரிஜிஸ்டர் காப்பிரைட் அறிவிப்பு.

---

இதனுல் சகலமானவர்களுக்கும் தேரிவிப்பது யாதேனில்:—

ஸ்ரீ வில்லிபுத்தூர் மாஜி இந்து ஹைஸ்கூல் ஹெட் மாஸ்டர் ம-ா-ா-ஸ்ரீ, S. A. திருமலைக்கொழுந்து பிள்ளையவர்களியற்றிய ஸ்ரீ வில்லிபுத்தூர் ஸ்தல புராணத்தின் காப்பி ரைட்டை (*Copy Right*) யான் ஷை S. A. திருமலைக் கொழுந்து பிள்ளையவர்களிடம் சர்வ சுதந்திரமாய்ப் பெற்று அச்சிட்டு காப்பிரைட் ரிஜிஸ்தர் செய்திருப்பதால் இப்புத்தகத்தையாவது இதிலுள்ள எந்த பாகங்களையாவது எவராயினும் எனது உத்திரவின்றி அச்சிடுவரேல் 'என்னுல்' கோறப்படும் சகல நஷ்டங்களுக்கும் கவர்ன்மெண்ட் காப்பிரைட் ஆக்டைமீறி நடந்ததிற்காக ஏற்படும் கிரிமினல் தண்டனைக்கும் உட்படுவோர்கள் என்பதை இதன் மூலமாய் தெரிவித்திருக்கிறேன்.

இப்படிக்கு,
T. சுப்பிரமணிய பிள்ளை
புக்ஷாப்,
ஸ்ரீவில்லிபுத்தூர்.

உ

ஸ்ரீராமஜெயம்.

வராகக்ஷேத்திரமாகிய

# ஸ்ரீவில்லிபுத்தூர் ஸ்தலபுராணம்.

கோதை பிறந்த வூர் கோவிந்தன் வாழுமூர்
சோதி மணிமாடந் தோன்றுமூர்—நீதியால்
நல்ல பத்தர் வாழுமூர் நான்மறைக ளோதுமூர்
வில்லிபுத்தூர் வேதக் கோனூர்.

---

மின்னார் தடமதிள் சூழ் வில்லிபுத்தூரென் றொருகால்
சொன்னார் கழற்கமலஞ் சூடினோம்.

ஓம்

# நூன்முகம்.

உலகெலா மோங்காரத் துருவாகி நிற்பானை
பலகலையுங் கற்றோரும் பார்த்தறிதற் கரியானை
சிலகலையே கற்றேமுஞ் சித்தங் கசிந்துருகி
மலமகலமனத் தகத்து மறவாது மதிக்கொள்வாம்.

உலக மாதாவாகிய பூலக்ஷ்மி தேவியே தமிழ்நாடுய்யும் பொருட்டு இம்மண்ணுலகில் திருவவதாரஞ்செய்யப்பெற்ற விழுமிய சிறப்புவாய்ந்த ஸ்ரீவில்லிமாநகரமான்மியம் எவரானும் கொண்டாடத்தக்க மகத்துவம் அமைந்துள தென்பதைக் கருதி அதனைச் சுருக்கமாகவும் விளக்கமாகவும் பக்திரசம் நன்கு பொழிதர அமிழ்தினுமினிய தமிழ்மொழியில் சத்தியரூபமாக வியற்றித் தரவேண்டுமெனப் பல அறிஞர்களுங்கேட்டுக்கொண்ட விருப்பத்திற்கிணங்கி கர்ணபரம்பரையையும் மூலகிரந்தங்களின் தாத்பரியங்களையும் நன்குதழுவி ஸ்ரீ ஆண்டாளது திருவடியிணை மலர்களையே பெருந்துணையாகக்கொண்டு இச்சிறிய நூலியற்றப்பெற்று வெளிவரலாயிற்று.

'அரியகற் றாசற்றார் கண்ணுந் தெரியுங்கால்
இன்மை யரிதே வெளிறு'

எனப்பொய்யில் புலவன் கூறியபடி அறியாமை எவர் பக்கலும் காணக்கூடிய வியல்பினதாதலின் என்னை யறியாதே ஏதாயினும் பிழைகள் இந்நூற்கண் மலிந்துகிடப்பினும் அறிஞர் அவற்றைப் பரிகரித்து, வேம்பினிடத்தும் தும்பி தேனையே கவர்வதையொப்ப இந்நூலிடத்துள்ள சத்தாகிய ரசத்தைத் தப்பாமற் கிரகித்துக் கொள்வரெனத் திருவருளைப் பிரார்த்தியாநின்றேன்.

S. A. திருமலைக்கொழுந்து

உ

ஸ்ரீராமஜெயம்.

# அட்டவணை.



---

ஓம்

ஸ்ரீ ஆண்டாள் திருவடிகளேசரணம்.



# ஸ்ரீவில்லிபுத்தூர் மான்மியம்

## நைமிசாரண்ணியம்

பூர்வம், சௌனகாதிமுனிவர் பலரும் பிரமதேவரை யடுத்து 'எந்தாய், நாங்கள் அனைவரும் செவ்வனே யாகாதி கிருத்தியங்களை நடாத்தித் தவஞ்செய்தற்கு மிகத்தகுதி யான ஸ்தலம் யாதென்பதை எங்கட்குக் கிருபை கூர்ந் தருளவேண்டு' மெனப் பிரார்த்தித்தகாலை நான்முகக் கட வுள் அவர்களை இனிது நோக்கி ஒரு தருப்பைப்புல்லை நேமி போல வட்டமாக வளைத்து அதனைப் பூமியிலுருட்டிவிட்டு 'இந்த நேமி எவ்விடஞ்சென்று இயக்கமற்று நிற்குமோ, அந்த இடத்தையே நீங்கள் யாகாதி கிர்த்தியங்களையும் ஜப தபங்களையும் இனிது முடித்தற்குகந்த ஸ்தான மாகக் கொண்டு அவண் உறைவீராக' வென ஆக்ஞாபித்தார். சதுர் முகனாரது ஆணைப்படியே, உருண் டோடுகின்ற நேமியை, விடாதுசென்று முடிவில் அது ஓரிடத்தில் மேற் செல்லாது நிற்கவே அந்த ஸ்தானத்தையே தங்கட்கு உகந்தவாச பூமியாகக் கொண்டனர். அதனாலந்த திவ்விய பூமி நைமிசாரண்ணியம் என, நாமம் பெற்றது. நீர்வளம் நிலவளம் பொருந்தி பற்பல சுகந்த விருக்ஷங்களும் செடிக ளும் நிறைந்த அந்த ஸ்தலத்தில் சௌனகாதிமுனிவர் அனைவரும் ஸ்ரீ மாதவன்பால் வேரூன்றிய பக்தியுடன்

வேதத்திற்கூறிய அறங்கள் பலவற்றையும் மிகவினிதாக நடாத்திவருவாராயினர்.

சூதபுராணிகர் வரவு

காமம் வெகுளி மயக்கம் என்னும் மூன்று குற்றங் களையுங்கடிந்து பகவத் பக்தியில் ஈடுபட்ட இத்தகைய யோகநிஷ்டர்கள் ஓர்நாள் காலைக்கடனைமுடித்த தருவாயில் சதாபிரமத்தியானபரராய் சகல புராணங்களையும், இதிகாசங்களையும் ஸ்ரீ வேதவியாச முனிவர்பால் நன்கு கேட்டு ஐயமும் திரிபும் கழன்று பரஞான சொரூபியாய் விளங்கும் சூதமுனிவர் அவர்களைக் கிட்டுவாராயினர்.

இம்முனிபுங்கவரைக் காணவே சௌனகாதி முனிவரெல்லாம் அர்க்கிய பாத்திய ஆசமனீயங்களையுதவி சோடச உபசாரங்களைச்செய்து அவரை நோக்கி ஓர் விண்ணப்பஞ் செய்வாராயினர்.

வெளிப்போந்த வரலாறு

'ஓ தபோநிதே! இதுவரை, கர்ணாமிர்தமான தங்களது வாக்கினின்று பதினெண்புராணங்களையும் மற்றை இதிகாசங்களையும் கேட்டு ஜகத்ரக்ஷகனாகிய ஸ்ரீயப்பதியிடம் கரை கடந்த பேரன்பைப் பெற்றுளேம். ஆயினும் பாண்டிய தேசத்தில் ஸ்ரீ வில்லிபுத்தூரை திலகமாகக் கொண்ட வராக க்ஷேத்திரத்தின் மகிமை இதுகாறும் எங்கட்குக் கூறப்பட்டிலது. பாவங்களைப்போக்கி எளிதே முக்தியையும்தரவல்ல வராகக்ஷேத்திரத்தின் மான்மியம் தங்களது வாயிலாக எங்கட்கு வெளிப்படின் கிருதார்த்தர்கள் ஆவோம் எனச் சொல்லி சௌனகாதிமுனிவர் யாவரும் சூதமுனிவரைக் குறையிரந்தனர்.

இங்ஙனம் சௌனகாதிமுனிவர் செய்த பிரார்த்தனையை செவிசாய்த்தருளிய ஸ்ரீ சூதமுனிபுங்கவர் சிறிது

நேரம் மௌனமாகவிருந்து பின்னர் அவர்களை மிகப் பிரீதியோடும் நோக்கிச் சொல்வாராயினர்.

இப்பொழுது நீங்கள் யாவரும் அறிய விரும்பும் இவ் வராகக்ஷேத்திரவைபவம் ஆதியில் ஸ்ரீமந் நாராயண பகவானால் ஸனகாதி யோகிகளோடுகூடிய பிரமதேவருக்கு வெளியிடப்பட்டது; பின்னர் இஃது பிரமதேவரால் ஸ்ரீ நாரதமுனிவருக்கு உபதேசிக்கப்பட்டது; பின்னர் நாரத மாமுனிவர் இதனை வியாசமாமுனிவருக்கு வெளியிட்டார். எனது ஆசிரியராகிய வியாசபகவான் மிகவிரகசியமாக எனக்கு விளக்குவித்தார். இத்தகைய திவ்வியக்ஷேத்திரத்தின் மகிமை ஸ்ரீ முகுந்தனது பாதாரவிந்தத்திற்குப் பேரன்பைவகித்து உத்தமவிரதங்களை அனுட்டித்து வருபவர்களாகிய உங்களாற் கேட்கத்தக்க சிறப்புடையதேயாம். ஆதலின் ஏகாக்ரசித்தத்தோடு கேட்கக்கடவீர். இந்தக்ஷேத்திரத்தின் மகிமை நாத்திகரேனும், பகவானிடத்தே அன்பற்றவரேனும், சிரத்தை குன்றினவரேனும் ஓர் சிறிதும் கேட்கத் தகாதது.

---

## வராகக்ஷேத்திரம்

### உண்டான வரலாறும் அதன் மகத்துவமும்

பகவானிடத்துபேரன்புவகித்த தபோதனர்களே, உங்கட்கு இந்த திவ்விய ஸ்தலம் ஏற்பட்ட காரணத்தையும் அஃது மகத்துவம் பெற்ற வரலாற்றையும் கூறுகிறேன், செவிக்கொண்மின்.

கிழக்கே சமுத்திரமும், தெற்கே கன்னியாகுமரியும், மேற்கே மலயபர்வதமும், வடக்கே இடபாசலமும் கொண்ட நாடு பாண்டியதேசமெனப்படும். இப்பாண்டிநாடு அநேக புண்ணிய ஸ்தலங்களையும் தீர்த்தங்களையும்

தன்னிடத்தே யமையப்பெற்றது. இவற்றுள் வராகக்ஷேத்திரம் ஓர் மிகச்சிறந்த பூமியாம். எங்ஙனமெனில்,

இரண்ணியாக்ஷவதம்

பூர்வம், இரண்ணியாக்ஷன் எனும் தானவன் தேவர்களுக்கு மிகுந்த இடுக்கணை விளைவித்துப்பின்னர் பூமியைத் தூக்கிக் கொண்டுபோய் கடற்குட்புகுந்து ஒளித்துவைத்தான். சமுத்திரத்தின் ஆழத்திற் பதிந்துகிடந்த இம்மண்ணுலகை திரும்பவும் உத்தாரணம் பண்ணும்பொருட்டு பகவானாகிய விஷ்ணுமூர்த்தி செப்புதற்கரிய பேருருவம் வாய்ந்த சுவேதவராகரூபம் கொண்டு சமுத்திரத்துட்புகுந்து துஷ்டனான இரண்ணியாக்ஷனை வதஞ்செய்து இம்மண்ணுலகைத் தமது உக்கிரதந்தத்தி லொட்டியவோர் அற்பப்பொருள்போல மிக எளிதாய் உத்தாரணஞ்செய்து அஷ்டதிக்பாலரையும் அஷ்டதிக்கஜங்களையும் அஷ்டகுலாசலங்களையுங்கொண்ட இந்த பூமியை முன்போல ஆயிரம் பணாமுடிகளைக்கொண்ட ஆதிசேஷனது சிரசில் நிலைபெறச்செய்து பின்னர் தாம் ஓர் சிறிய வராகவடிவங்கொண்டு இம்மண்ணுலகில் ஓர் பாங்கர் அமர்ந்து இரண்ணியாக்ஷனால் இதுவரை வருத்தமுற்றிருந்த பூமிப்பிராட்டியை அவளது கிலேசந்தீர தழுவியெடுத்து மடியிலிருத்தித்தமது சங்கற்பத்தால் அவ்விடத்திலுண்டாகிய கற்பகதருமூலத்தில் மகத்தான இரத்னசிங்காதனமும் அமையவே அதன்கண் பூமிதேவியோடும் வீற்றிருந்து இருடியர் கூட்டங்களாற்றுதிக்கப் பெற்றவராய் வருத்தம் நீங்கிய நிலமடந்தையை கண்குளிர நோக்கிப் பூரணகடாக்ஷம் செய்தருளினர்.

இங்ஙனம் பரந்தாமனது முகாரவிந்தம் குளிர்ந்து அருள் ததும்பி நின்றதைக் கண்ட பூமிப்பிராட்டியார் ஆனந்தகரமாக அவரைக் கண்குளிரச் சேவைசெய்து ஒரு விண்ணப்பஞ் செய்வாளாயினள்.

'அடியார்க்கெளியனாக வந்தருள்புரியும் ஜனார்த்தனா! உமது பூரணகடாக்ஷத்தால் பரிபூரணமாக மனங்குளிர்ந்தேன். ஓர் விண்ணப்பம் உளது, அதனைப் பூர்த்திசெய்ய வேண்டும். தாமிவ்விடத்திலேயே வீற்றிருந்து மந்தமான மதிபடைத்தவரும், பாபகர்மிகளும்கூட எளிதே இம்மை மறுமைப் பலன்களையடைந்து முக்தர்களாக வேண்டியதற்குச் சாதகமான தர்மசூக்ஷ்மங்களை விளக்கியருளவேண்டும்' எனப்பிரார்த்திக்கவே கருணையங்கடலாகிய பகவான் பூமடந்தை உகக்குமாறு மோக்ஷதருமங்களை விளக்கஞ் செய்தார்.

அப்பொழுது, பூமிதேவி உடலம்பூரித்து பகவானை மற்றுமோர்தரம் நமஸ்கரித்து, "தாமிப்போழ்து பிரசாதித்தருளிய தர்மங்கள் யாவும் அறிவுபடைத்த ஆத்மாக்கள் யாவருக்கும் இகபரசாதகமாய் எளிதே அநுஷ்டிக்கக் கூடியவையே. ஆயினும் சம்சாரபந்தத்திலுழலும் சேதனர்கள் இவற்றினிடம் சத்தியபுத்தியை வகிக்காமலும், சிரத்தை கொள்ளாமலும் இவற்றை யவமதிக்கக்கூடும். ஆதலின் தர்மசொரூபியாகிய தாம் இந்த க்ஷேத்திரத்திலேயே நித்தியவாசஞ்செய்து ஆன்மாக்களது அறிவை நல்வழிப்படுத்தி கிருதார்த்தராகும்படி கடாக்ஷிக்கவேண்டு' மெனக் குறையிரந்தாள்.

இங்ஙனம் பிரார்த்தித்த பூமிப்பிராட்டியாரை ஸ்ரீ பகவான் மிகுந்த குதூகலத்துடன் ஆலிங்கனஞ்செய்து அவளை நோக்கி, 'மங்கையர் திலகமே, உனது விருப்பத்தின் படியே நாம் இவ்விடத்தில் நித்தியவாசஞ்செய்து சேதனர்களை ஆட்கொள்வோம். இந்த திவ்விய பிரதேசம் யாவராலும் வராக க்ஷேத்திரமெனக் கொண்டாடப்படுக. இதன்கண்வாழும் ஜீவர்கள் தேகாந்தத்தில் சம்சாரபந்தத்தினின்று நீங்கி நம்மால் இரக்ஷிக்கப்படுவர். அன்றியும் நீயும் பெரிய திருவடி

(கருடபகவான்) முதலாயினுரும் இந்த திவ்வியப் பிரதேசத்தில் அவதரித்து மோக்ஷதருமங்களை திராவிடவேதத்தில் வெளியிடப்போகின்றீர்கள். இங்ஙனம் நிகழவிருப்பதால் வராகக்ஷேத்திரவாசிகள் எளிதே உஜ்ஜீவிக்க வழியுண்டாகும்' எனக்கூறினர்.

இவ்வாறு ஸ்ரீமந்நாராயண பகவான் அனுக்கிரகஞ் செய்யவே நிலமடந்தை ஆனந்தக்கடலில் மூழ்கிளு' ளென சூதமுனிவர் கூறவே சௌனகாதிகள் மிகவும் களிப்படைந்து அவரிடம் விடைபெற்றுச்சென்று மத்தியான கர்மங்களை முடித்துக்கொண்டு திரும்பவும் அம்மகாமுனிவரைக்கிட்டி மற்றுங் கூறுவாராயினர்.

---

## வராகக்ஷேத்திரத்தின் எல்லைகள்

### மண்டுகே பர்வதம்

ஓ, தபோநிதே, உமது கிருபையால் வராகக்ஷேத்திரம் பூமாதேவியின் வேண்டுகோளுக்கிரங்கி ஸ்ரீமந்நாராயண பகவானுல் மிகவும் புனிதமாக்கப்பட்ட புண்ணிய ஸ்தானமென்பதை தெளிந்துகொண்டோம். அன்றியும் அந்த திவ்வியக்ஷேத்திரம் பாண்டியதேசத்தி லிருப்பதாகவும் அருளினீர். இனி அத்தகைய உத்தமக்ஷேத்திரம் பாண்டிய நாட்டில் எவணமைந்துளதென்பதையும், அதன் எல்லைகளையும், அதன் விஸ்தீரணத்தையும், அதனுள்ளமைந்த புண்ணியதீர்த்தங்கள் யாவையென்பதையும், அதன்கண் முற்காலத்தில் எவரெவர் தவஞ்செய்து சித்திமுத்திகளையடைந்தார்கள் என்பதையும் சவிஸ்தாரமாக தம்மிடம் தெரிந்துகொள்ள மிகவும் அவாவிளைகின்றது. எங்களது மனோரதத்தைப் பூர்த்திசெய்ய வேண்டுமென வேண்டிக் கொண்டனர்.

அகத்திய முனிவர்வாழும் பொதிகை

சூதமுனிவர் இங்ஙனம் பிரஸ்னங்களை விடுத்த சௌனகாதிமுனிவர்களை கண்குளிர நோக்கி, 'ஓ, தபசிகளே! நீங்கள் கேட்டுக் கொண்ட பிரகாரம் எல்லாம் சொல்கிறேன். சாவதானமாகச் செவிக்கொண்மின். பாண்டியநாட்டின் மேற்கெல்லையில் மலையபர்வத மமைந்துளதென முன்னமே கூறினேனல்லவா. மலையபர்வதம் ஓர் நீண்டமலைத்தொடர். அதனது தெற்குக்கோடியில் பொதிகை எனும் திவ்விய சிகரமுளது. கங்காநதிக்கு இணையான தாமிரபர்னியெனும் நதி உற்பவமாகின்ற ஸ்தானமும் அதுவேயாம். தெய்வ மணங்கமழும் பலசோலைகளடர்ந்த அந்தத் தபோவனத்தில் விந்தியபர்வதத்தின் கொட்டத்தையடக்கி சப்த சமுத்திரங்களையும் உள்ளங்கையில் உளுந்தளவாகக் கொண்டு தேவர்களது வேண்டுகோளுக்காக ஆசமனஞ்செய்த அகஸ்திய மகாமுனிவர் அநேக முனிகணங்களாற் சேவிக்கப்பெற்று உலக நன்மையை சதாவிளைவிக்கவேண்டி தவஞ்செய்து கொண்டிரா நின்றார். நிற்க,

## மண்டூகே பாவதம்

இந்த அகஸ்திய கூடாசலத்திலிருந்து வடக்கு நோக்கிச் செல்லும் மலையபர்வதத்தின் உன்னதமான சிகரம் மண்டூகபர்வதம் (தவளைமலை) எனப்பெயர் பெறும். இந்த மலையினிடத்தே மண்டூகமுனிவரென்பவர் தமது மாணாக்கர்களோடு தவஞ்செய்து கொண்டிராநின்றார். தென்வடலாயோடும் அம்மலையின் கிழக்குத் திக்கிலுள்ள அடிவாரமே வராகக்ஷேத்திரமாம். இந்த க்ஷேத்திரம் தென்வடல் இரண்டுயோஜனை தூரமும் கிழக்கும் மேற்குமாய் இரண்டுயோஜனை தூரமுமமைந்துளது. இந்த திவ்விய பூமியில் பரந்தாமன் நித்தியவாசஞ் செய்துகொண்டு அவ்

விடத்திலுறையும் தபசிகளுக்கும் மற்றவர்க்கும் சித்தி யளித்துக் கொண்டிராநின்றூர் எனக்கூறி வரும்பொழுது,

மண்டூகமுனிவர் சரிதம்

சௌனகாதி முனிவர்கள் சூதபுராணிகரை மிக விணை யத்துடன் உபசரித்து 'ஓ பாகவதசிகாமணி, அந்த மண்டூக முனிவர் யாவர்? அவருக்கு அந்த நாமம் வந்தகாரணம் யாது? அவர் எவ்விதமாக சித்திபெற்றூர்? இவையாவை யும் எங்கட்கு விளங்க எடுத்துரைக்கவேண்டு' மெனக் குறையிரந்தனர்.

சூதமுனிவர் அவர்களை நோக்கி, 'நீங்கள் கேட்டுக் கொண்ட வண்ணமே விபரமாக மண்டூகமுனிவரது சரிதத் துர்வாசர் வரு தைக் கூறுகிறேன். இவர் பூர்வம் இடபா கை சலத்தில் (இடபாசலமென்பது திருமா லிருஞ் சோலைமலை, இம்மலையில் உறைதரும் சுந்தரராஜப் பெருமாளே அழகரெனப்படுவர்.) தவஞ்செய்து கொண் டிருந்த பிராமணர். கௌண்ணிய கோத்திரத்தில் உதித்த இவ்வந்தணர் பெயர் சுதபர். இவர் முக்தியின்மேல் நாட் டத்தைவைத்து அனுதினமும் இந்த க்ஷேத்திரத்திலுள்ள சிலம்பாநதியில் ஸ்நானஞ்செய்து வேதத்திற்கூறிய கர்மா னுஷ்டானங்களை செவ்வனே முடித்து அவண் உறைதரும் ஸ்ரீ சுந்தரராஜப்பெருமாள் பக்கல்இடையறாத சிந்தையராய் தவஞ்செய்து கொண்டிருந்தார். இத்தகைய தபோவனத்தி லோடா நின்ற சிலம்பாநதியில் ஸ்நானஞ் செய்தற்காக ஓர்சமயம் துர்வாச முனிபுங்கவர் யோகநிஷ்டர்களான (சூரிய கிரணத்தை புசிப்பாகக்கொண்ட) வாலகில்லியமுனி வரரும் வாயுவையே ஆகாரமாகக் கொண்ட வாதாசனர் முதலிய மற்றுஞ்சில முனிவர்களும் புடைசூழ்ந்துவர சுதப முனிவரது ஆச்சிரமத்தை யணுகுவராயினர். உறைத்தகர்ம

சிரத்தை கொண்ட சுதபர் தமது ஆசிரமத்திற்குவந்த இந்தத் தபோதனர் களைப் பூரணமாய் வரவேற்று அவர்கட்குச் செய்யவேண்டிய உபசாரங்களை ஒழுங்காகச் செய்யாது அவசரப்பட்டு நூபுரகங்கையில் (சிலம்பா நதியில்) நீராடுவதற்காகச்சென்று அந்தப் புனலில் மூழ்கி பாபத்தைப்போக்குதற்காக வேதத்தில் கூறப்பட்ட அகமருஷ்ண மந்திரமென்னும் திவ்விய சூக்தத்தை ஜலத்தில் மூழ்கிய வண்ணமே ஜபித்துக்கொண்டு சிந்தையை ஸ்ரீசுந்தரராஜப் பெருமாள் பக்கல் நாட்டிநிட்டையி லிருக்கும்போழ்து தமது அந்தர் திருஷ்டியில் (உட்கண்பார்வையில்) மகாகோபியாகிய துர்வாசமுனிவருக்குத் தாம் அதிதிசம்ஸ்காரங்களை செவ்வனே நடத்தாது அவசரப்பட்டு முடித்து ஸ்நானஞ்செய்ய வந்ததால் அவரிடம் மிகவும் வெகுளி பொங்கி யெழுவதைக் காணவே நடுநடுங்கி நதியைவிட்டு புறப்பட்டுத் தமது ஆச்சிரமத்தையடைந்து அதிதிகளைத் தக்கபடி உபசரித்தற்கு வேண்டிய பூஜா திரவியங்களை எடுத்துக்கொண்டு அவர்களிடம் ஓடிவந்தார். அப்படியோடிவந்த சுதபரைக்காணவே ரௌத்திரா வேசங்கொண்டு நின்ற துருவாசர் அவரை நோக்கி 'ஏ, ஆத்மஞானமில்லாத துராத்மா, உனது வாசஸ்தானத்திற்குவந்த பிரமத்தியானபரர்களான இவ்வுத்தம தபசிகளைக் கண்டவுடன் செய்யவேண்டிய அதிதிபூஜைகளைச் செவ்வனே நடத்தாது நீ அனுதரவுசெய்து கர்மமே முக்கியமெனக்கருதி நெடுநேரம் தண்ணீருள் மூழ்கியவண்ணமே கிடந்தா யாதலின் நீ அங்ஙனமே கிடக்கும் இயல்பினதாய தவளையி னுருவைப்பெறக்கடவாய்(மண்டூகமாகக் கடவாய்)' எனச்சாபங்கொடுத்தார்.

துர்வாசர் சுதபருக்குச்சாபங் கொடுத்தல்

இந்தச் சாபமொழிகளைக் கேட்கவே சுதபமுனிவர் உடல் நடுக்கங்கொண்டு நெஞ்சுலர்ந்து நாவும் வறண்டு

சுதபர் மனந் தேறுதல் அறிவு முழுமுற்றும் புறம்போயவர்போல் மூர்ச்சையுற்று அந்த முனிவர் குழாத்தின் பாதங்களே கதியெனக்கிடந்தார். இங்ஙனம் ஸ்தம்பம் போற்செயலற்றுத் தங்களைச் சரணமடைந்த அந்த பிராமணரை அந்த யோகியர் கூட்டம் ஆதரவுடன் கைகளாற் றாக்கி யணைத்துக்கொண்டு, 'நீர் ஒன்றிற்கும் அச்சங் கொள்ளவேண்டாம். உமக்கு நேர்ந்த இந்தக் கொடிய சாபம் விமோசனமாகும் வழியை உமக்குக் காட்டுகிறோ' மெனச் சமாதானம்பண்ணி அவரை நோக்கி 'துர்வாசமா முனி எது சொன்னாலும் அது பலிக்கவே செய்யும். அவரது சாபமொழிகள் க்ஷணப்பொழுதில் பலிக்கவல்ல ஆற்றலுடையவையாம். ஆயினும் ஜடபரதர் மான் ஜன்மமெடுக்க நேர்ந்தபோழ்தும் ஆத்மஞான திருஷ்டியை விடாதிருந்ததுபோல் நீரும் உமது மோக்ஷ நோக்கத்தை விடாதிருப்பீர். உமக்கு நேர்ந்த சாபம் ஒழிகின்றவழி யாதெனின் கூறுகின்றோம். இந்தப் பாண்டிய தேசத்திலுள்ள வராக க்ஷேத்திரத்தின் மேற்கெல்லையாக பலகொடுமுடிகளோடுங் கூடிய தர்மாத்ரி எனும் உன்னத பர்வதமொன்றுளது. அந்த மலையின் கிழக்குச் சாரலில் ஓர் அருவி அம்மலையினின்றிழிந்து ஒரு சிறுநதி ஓடாநிற்கும். அவ்வாற்றின் இருகரைகளிலும் வாசனை தங்கிய மலர்களையும் சுவைகெழுமிய பழங்களையுங்கொண்ட விருக்ஷங்கள் அடர்ந்த அடவியொன்றுளது. பூர்வம் வசிஷ்டர், கௌதமர், காசிபர், கண்ணுவர், பரத்துவாசர் முதலான இருடியர் கோத்திரங்களிலுதித்த உத்தம அந்தணமுனிவர் பலரும் அவண், தவஞ்செய்து பிரஹ்ம சாயுஜ்ஜியம் பெற்றுளார். அவ்வண்ணமே நீரும் அந்த தர்மாத்ரி பர்வதத்தைக்கிட்டி அம்மலையி னின்றிழிதரும் திவ்விய கங்கையில் நீராடிய மாத்திரையானே உமது தவளையுருவம் உம்மைவிட்டு

நீங்கும். நீரும் இன்றுமுதல் மண்டூகமுனிவரென உலகப் பிரசித்திபெறுவீர்; அன்றியும் நீர் அந்த தர்மாத்திரியை யடைந்து அவண் தவஞ்செய்யப்போவதால் இனி அந்த தர்மாத்ரிபர்வதம் உமது பெயரால் மண்டூகபர்வதமெனப் பெயர் வழங்கும். உமக்கு நேரும் மண்டூகவுருவம் நீங்கிய பின்னரும் நீர் உமது சிஷர்களோடு அந்த தபோவனத்திற் றவஞ்செய்து வருவதால் சித்திமுத்திகளையும் பெறுவீர். ஓர் சிறிதும் மயங்கவேண்டாம்' என ஆதரவுமொழிகளைக் கூறவே சுதபர் உடலம்பூரித்து அந்த முனிவர்களிடம் மற்றுமோர் விண்ணப்பஞ்செய்து கொள்வாராயினர்:

'உத்தம புருஷர்காள், தங்களது ஆசீர்வாதத்தால் கிருதார்த்தனானேன். நீங்கள் கூறியவண்ணமே செய்து சாப நிவிர்த்தியடைவேன். ஆயினும் எனக்கொரு நியமமுளது பிரதிதினமும் இந்தச் சிலம்பாநதியில் ஸ்நானஞ்செய்து இந்த திருமாலிருஞ் சோலைமலையி லெழுந்தருளியிருக்கும் அழகரை (சுந்தரராஜப்பெருமாளைத்) தரிசிக்கும் நியமம் பூண்டுளேன். தங்களது பேரருளால் அந்த நதிஸ்நானமும் அழகர் சேவையும் அவண் அமையுமானால் எனக்கொரு குறையுமில்லை' யெனப்பிரார்த்தித்தார்.

இங்ஙனம் பிரார்த்தித்த மண்டூகமுனிவரது பகவத் பக்தியைக்கண்டு முனிவர் குழாம் மிகவும் மனம்பூரித்து அவரை நோக்கி 'உமது கோறிக்கைப்படியே அந்த மண்டூகபர்வதத்தில் உம்பொருட்டு சுந்தரராஜப்பெருமாள் எழுந்தருள்வர். நூபுரகங்கையாகிய சிலம்பாநதியும் அவண் அமையும். நீர் இனிக்காலதாமதஞ் செய்யாது அத்தலத்தை யடையக்கடவீர்' என ஆசிமொழிகளை கூறி அவர் செய்த பூஜையை ஏற்றுக்கொண்டு அந்தர்த்தானமாயினர்.

முனிசிரேஷ்டர்களது சந்நிதானத்தால் பிடித்தற்கஞ்சி நின்ற சாபம் அவர்கள் மறைந்த க்ஷணமே சுதபமுனிவரைப் பிடிக்கவே அவர் உடனே மணலில் மறையும் நுணலுருவம் (தவளை வடிவம்) பெற்றனர். விளக்கணையவே இருள்சூழ்ந்து கொள்ளுமன்றே. திகில் ஒருபக்கமும் ஆச்சரிய மொரு பக்கமும் குடிகொண்ட மண்டூகமுனிவர் தமக்கு அந்தரங்கமான சிஷர்களைக் கூவியழைத்துக்கொண்டு தபோபலத்தால் அவர்களோடு ஆகாயவீதி வழியாகக் கமனஞ் செய்து தர்மாத்ரி பருவதத்தைக் கிட்டினர். அந்தப் பர்வதத்தையும் அதனின்று பாய்ந்தோடிவரும் நதியையும் அந்நதியினிருமருங்கும் விளங்கிய செண்பகாடவியையும் தரிசனஞ்செய்யவே என்று மறியாத குதூகலத்தை மனத்துட்கண்டார். தம்மோடுவந்த முனிவர் குழாத்துடன் நதியில் மூழ்கியவுடனே தம்மைப் பீடித்துநின்ற தவளை வடிவம் விழித்தெழுபவனுக்குமுன் கண்டு கொண்டிருந்த சொற்பனம் போனவழி தெரியாது மறைவது போல உடனே நீங்கியது. அப்பொழ்து அவரது உடலம் பூரித்து அருள்மயமாய் நின்ற அற்புதத்தை என்சொல்வது! இங்ஙனம் புளகாங்கிதங்கொண்டுநின்ற மண்டூகமுனிவர் பரவசப்பட்டுத் தமக்குட்சொல்வார் 'நான் செய்த தவமே தவம். இன்றுதான் எனது பிறவி யீடேற்றம் பெற்றது. கேடுபோற்றேன்றி ஆக்கமாக விளைந்த ஆச்சரியத்தை என்சொல்வேன். மகாதபசியாகிய துர்வாசமாமுனி சாபமே எனக்கு சித்திமுத்திகட்கு வாயிலானது. ஆன்றோர் தரிசனம் வீண்போமோ! கோபமுள்ளவிடத்திற் குணமுங்குடியிருக்குமெனக் கூறுவரன்றே! சாபத்திற் கஞ்சி இருடியர் பாதங்களில் விழவே துர்வாசமுனிவரது சினம் நீர் கிழியவெய்த வடுப்போல் விலகி மகாமுனி கணங்

மண்டூகமுனிவர் சாபவிமோசனம் பெறல்

களது பூரணானுக்கிரகத்தை எனக்குப் பயந்தது. தூர்வாச மகாமுனிவர் சாபம் இடாதிருப்பின் இந்த மகா உத்தம மான தபோவனவாசம் எனக்குக் கிட்டுமோ' வெனக்கூறி ஆனந்தக்கடலுள் மூழ்கினர்.

பின்னர், மண்டூகமுனிவர் தமது மாணாக்கர்களோடு அந்தத் தபோவனத்தில் அரிய தவஞ்செய்து கொண்டு ஸ்ரீமந்நாராயண பகவானது தரிசனத்தை நாடி பிரமத்தியானபரராய் காலத்தை யோட்டிவந்தார். இங்ஙனம் ஸ்ரீசுந்தரராஜப் பெருமாள் சேவையைநாடி மண்டூகமுனி வரும் அவரது சிஷ்யகணமும் கடுந்தவம் புரிந்து வந்தபோழ்து ஸ்ரீ பகவான் அவர்களது அன்பின் முதிர்ச்சியைக் கண்டு ஓர்நாள் ஸ்ரீ சுந்தரவல்லி சமேதராய் கருடவாகனத்தில் தேவகணங்களும் இருடியர் கூட்டமும் உச்சிமேற்கொண்ட கைகளோடும் சேவிப்ப அந்தத் தபோ வனத்தையடைந்து மண்டூகமுனிவருக்கும் அவரது முனி கணங்களுக்கும் திவ்விய தரிசனந்தந்தார்.

சோலைமலை யழகர் மண்டூக ருக்குப் பிரத்தி யக்ஷ சேவை தருதல்

இங்ஙனம் சாக்ஷாத் வைகுண்டபதி சோலைமலையழக ராக கருடவாகனரூடராய் தேவர்களும் இருடியரும் துதிப்ப தேவதுந்துபிமுழங்க எழுந்தருளவே மண்டூகமுனி வரும் கணங்களும் அடியற்ற பனைபோல் பெருமாளுக் கெதிரே பன்முறை தீர்க்கதண்டம் சமர்ப்பித்து புளகாங் கிதம் கொண்டு சேவித்து துதிக்கலானார். மண்டூகமுனிவர் அந்தத் திவ்வியமங்கள வடிவத்தை கண்குளிரச் சேவை செய்து உடலமும் மனமும் பூரித்து 'எனது தியானத்தின் படியே காணப்பெற்றேனே' யென ஆனந்தக் கூத்தாடிக் கொண்டு தழுதழுத்த நாவோடு தோத்திரஞ் செய்வா ராயினர்:

"ஏ, ஜகத்தையே சரீரமாகக்கொண்ட பரமபுருஷா, எதற்கும் மூலகாரணப் பொருளாய், உள்ளிருந்து எல்லாவற்றையும் ஆட்டுவிக்கும் சூத்ரதாரனைப், அடியார்க்கெளியனாய், தொண்டரது இதயமே கோயிலாகக் கொண்டவனாய், எங்கணும் நிறைந்த பரிபூரணனாய், அருளே வடிவாய் உறைதராநின்ற ஒப்பில்லா நீலமணியே, உன்னை நமஸ்கரிக்கின்றேன்.

உனது மகிமையை எங்ஙனம் எடுத்துரைக்கவல்லேன்! 'சர்வம் விஷ்ணுமயம் ஜகத்' என்றபடி நீயே பிரபஞ்சத்திற்கு உற்பவ ஸ்தானமென வெண்ணுகிறேன். பிரளய காலத்தில் ஜகத்தை விழுங்கி உனது கர்ப்பத்தில் வைத்து ஆலிலைமேற் பள்ளிகொள்ளா நின்றாய். பின்னர் ஜகத்தைத் திரும்பவும் படைக்க வெண்ணங் கொள்ளும் போழ்து படைப்புக் கடவுளாகிய பிரமதேவன் உனது உந்தியந் தாமரையினின்று உற்பவிக்கின்றான். தேவர்க்கெல்லாம் அதிபதி நீயேயாகும்; தர்மத்திற்கு இடுக்கண் நேர்ந்து அதர்மம் தலையெடுக்கும்போதெல்லாம் உலகரக்ஷணார்த்தம் நீயே பூமியிலவதரித்து துஷ்டரை நாசஞ்செய்து வேத தர்மத்தை நாட்டாநின்றாய்; வேதபுருஷன் நீயேயாகும். இங்ஙனம் ஜகத்திற்கு அச்சாணிபோல் நின்று அதனை நிலை பிறளாது நடாத்துவிக்கும் சர்வசக்தனாகிய உன்னைச் சரணமடையாநின்றேன்' எனப்பலவாறு மனங்கசிந்து தோத்திரஞ்செய்து நின்ற மண்டூகமுனிவரை ஸ்ரீ பகவான் தமது திருநேத்திரங்களால் பூரண கடாக்ஷஞ்செய்து அவரை நோக்கிக் கூறுவார்:

'பக்தசிகாமணியாகிய மண்டூகமுனிவரே, நீர் இது வரையும் இயற்றிய கர்மங்களின் பரிபாகத்தால் இன்ற

சோலைமலை யழகர் மண்டூக முனிவர்க்காக மண்டூக பர்வ தத்திற் கோயில் கொண் டருளல்

நாமுமக்குப் பிரத்தியக்ஷ சேவை தந்தோம் நீரிப்போழ்து யாது கேட்பினும் உமது மனோரதத்தை முற்றுவிப்போம்' எனப் பூரண கிருபையோடும் பகவான் இனிய வசனங்கூறவே முனிபுங்கவர் தமது கரங்க ளிரண்டையும் உச்சிமேற்கூப்பி 'ஏ, பரம புருஷா, சர்வபூத சாக்ஷியாகவும் ஜீவ கோடிகளது இதயங்களிலெல்லாம் உறைபவராகவும் எங் கும் கரந்துறையாநின்ற கருமுகில் வண்ணனே, நீர் அறி யாத அடியேன் உம்மிடம் கேட்கும் வரம் ஏதேயுளது! ஆயினும் அருள்புரிந்து கேட்கச் சொன்னதால் ஒன்று கூறுவேன். நான் இந்த தபோவனத்தில் தவஞ்செய்து கொண்டிருந்தது உமது சாயுஜ்ஜியபதவியை நாடியே, உமது திவ்விய தரிசனத்தாற் கிருதார்த்தனாயினேன். உமது திவ் விய பாதாரவிந்தங்களை கணப்பொழுதும் மறவாத இறவாத அன்பொன்றுமே அடியேன் தம்மிடம் வேண்டிக் கொள் ளற்பாலது. எக்கணத்தில் இவ்வுடலம் நீங்குமோ அக் கணத்தில் அடியேனை உமது திவ்விய பாதகமலங்களிற் சேர்த்துக்கொள்ளும்' என தழுதழுத்தமொழியோடும் பக வானை வேண்டிக்கொண்டார். அப்போழ்து வைகுண்ட பதி அவரை மற்றும் இனிது நோக்கி, ஏ, அன்பரே, நீர் கேட்டுக் கொண்டபடி நீரும் உம்மையடுத்து நிற்கும் மற் றைத் தபோதனர்களும் தேகாந்தத்தில் நமது பரமபதத் தைக்கிட்டுவீர். நீர் சித்திபெற்ற இந்த வராக க்ஷேத்திரத் திலுள்ள இவ்வடவியில் உம்பொருட்டாக நாம் கோயில் கொண்டருளி நித்தியவாசஞ்செய்து ஆன்மாக்களைப் பரி பக்குவஞ்செய்து பரமபதத்திற்கு ஆளாக்கிக் கொண்டிருப் போம்' என வரமளித்துவிட்டு உருக்கரந்தார். அங்ஙனம் பகவான் மறையவே மண்டூகமுனிவர் அவர் பிரிவாற் சிறிது

மனம்வாடிப்பின்பு மனந்தேறி மற்றை முனிகணங்களுடன் சதா நிஷ்டைகொண்டு அந்த க்ஷேத்திரத்தில் வசித்துக் கொண்டிருக்கிறார்.

மண்டூகமுனிவர் சரித்திரப் பலன்

இந்த மண்டூகமுனிவர் சரிதத்தை எவரெவர் உள்ளபடி சிரத்தைகொண்டு பிதுர் தினங்களிலும் மற்றைப் பருவகாலங்களிலும் புண்ணிய தினங்களிலும் படிக்கிறார்களோ அல்லது பிறர் படிக்கக் கேட்கிறார்களோ அவர்கள் பிதுர்க்களது பிரீதியால் நல்வாழ்வுபெற்று பிதுர்க்களும் தாமும் உத்தமகதியை யடைவார்கள். இதிற் சந்தேகமில்லை என ஸ்ரீ சூதமுனிவர் விளங்கக்கூறி மற்றும் சௌனகாதிகட்குச் சொல்வாராயினர்.

### சண்பகாரண்ணியச் சிறப்பு

ஓ, சௌனகாதி முனிகளே, இந்த வராகக்ஷேத்திரத்தைப்பற்றி மற்றும் நீங்கள் தெரிந்து கொள்ளவேண்டிய அற்புதங்கள் பலவுள. யாவற்றையும் விபரமாகக் கூறுகிறேன்.

மண்டூக பர்வதத்தின் தாழ்வரையில் விருக்ஷங்கள் அடர்ந்த ஓர் அரண்ணியமுளதென்றும், அதிலிருந்த மண்டூகமுனிவரும் அவரது தொண்டர்களும் இஷ்டசித்திகளைப் பெற்று தபோநிஷ்டையிலிருப்பதாகவுங் கூறினேமல்லவா அந்த அடவியே சண்பகாரண்ணியமாம். (சண்பகாரண்ணியமே இக்காலத்திற் செண்பகத்தோப்பு எனப்பிரசித்தி பெற்று ஐயனார் கோயிலோடும் விளங்காநின்றது) இது இந்திரனது கற்பகத்தோட்டத்தையும், குபேரனது உத்தியான வனத்தையும் எளனம் பண்ணத்தக்க சிறப்பினதாய் ரமணியமான பல அருவிகளாற்றக்க சீதளம் பொருந்தி, நன்மணங்கமழும் பலவிதப் புஷ்பங்களைச் சொரியாநின்ற

அநேகவித விருக்ஷங்களைக் கொண்டதாக, நாவிற்கினிய பலவிதக் கனிவர்க்கங்களை நல்கும் பழமுதிர் சோலைகள் நானுபக்கத்தும் அமையப்பெற்றதாய், குயில் முதலிய பக்ஷி ஜாலங்களின் இனியகுரல் எங்கணும் தொனிப்பதாய், ஓர்பால் கைமலைகளும் (கைமலையென்றது தும்பிக்கை கொண்ட யானை) ஓர்பால் கடுவாய்களும், ஓர்பால் கரடிகளும், ஓர்பால் மற்றும் பல துஷ்டமிருகங்களும் சஞ்சாரஞ் செய்யுமியல்பினதாய், ஓர்பால் துள்ளிக் குதித்தோடும் பலவித மான் கூட்டங்கள் ஒன்றுகூடி ஓடிவிளையாடுமிடங்களைக் கொண்டதாய், ஓர்பால் நன்மணம் வீசி காண்பார் நேத்திரங்கட்கு ஆனந்தத்தை விளைப்பிக்கவல்ல பலவித புஷ்பங்களைத்தராநின்ற பூஞ்செடிகள் நிரையப்பெற்றதாய், இவையே யன்றி மாந்தர்க்குத் தீவினைப்பயனுகவரும் பற்பல நோய்களையும் எளிதிற்போக்கவல்ல ஔஷதிகள் பலவிடத்தும் அமையப்பெற்றதாய் விளங்காநிற்கும். சுருங்க வுரைப்பின் ஐம்பொறிகளுக்கும் ஒருவன் உகப்பான சுகத்தை நல்கவிரும்புவானேல் அவன் அடையவேண்டிய அரண்ணியம் இதுவேயாம். பற்பல ஜாதிவண்டுகள் விளைவிக்கும் ரீங்காரமும், கிளி, குயில் முதலிய பக்ஷிஜாலங்கள் கூவுதலாலுண்டாகும் தீங்குரல்களும், மலையினின்றிழியும் அரிவிகளாலும் பாய்ந்தோடும் நதிகளாலும் உற்பவிக்கும் இன்னிசையும் மந்தமாருதத்தால் விருக்ஷங்கள் அசைவதால் விளையுங்கோஷங்களும், மற்றை ஒலிகளும் ஒன்றுகூடி முக்திக்கு வித்தாகிய பிரணவத்தின் நாதம் சதா ஓம் ஓம் என, செவிக்குபதேசஞ்செய்யும் இந்த சண்பகாடவியில் முனிகணங்களும் தேவகணங்களும் எப்போழ்தும் வாசஞ்செய்து கொண்டிருப்பர். அன்றியும் பற்பல கோத்திரங்களிலுதித்த அந்தணர்களும் ஐம்பொறியடக்கித் தவம் புரியாநிற்பர்.

### காலநேமி செய்த இடுக்கண்

இத்தகைய தபோவனத்தின் மகிமையை மற்றுங் கூறுவேன், கேண்மின். பூர்வம் அசுரர்களாற் பீடிக்கப் பட்ட திக்குபாலர்கள் தத்தம் பதவிகளையிழந்து இந்த க்ஷேத்திரத்திற்றவம்புரிந்து இழந்த பதவிகளைத் திரும்ப வுங் கிட்டினார்கள். இங்ஙனம் இந்த திவ்விய க்ஷேத்திரம் தபோபலத்தை நல்கி தேவர்களுக்கும் இருடியர்க்கும் பெரும் பயனளிப்பதைக் கண்ட காலநேமி எனும் வல்ல ரக்கன் இந்திராதி தேவரையெல்லாம் தான் பெற்ற வரங் களின் வலிமையால் தேவலோகத்தினின்று துறத்தியது மல்லாமல், அன்னோர் இவ்வனத்தை நாடிவரவே அவர் களைவிடாது தொடர்ந்துவந்து சண்பகாரண்ணிய வாசிக ளாகிய இருடியர்க்கும் பதவிகளை யிழந்தோடிவந்த தேவர் களுக்கும் பொறுக்கொணு இடுக்கண் விளைவித்தான். ஆத லின் அவர்கள் ஒருவித சத்கருமங்களையும் இயற்றக் கூடா தாயிற்று.

---

## இந்திராதி தேவர்கள்

### வைகுண்டநாதனை யடைந்து முறையிடல்

இவனது கொடுமையைச் சிறிதும் பொறுக்கலாற்றாத தேவர் கூட்டம் தம் தலைவனாகிய இந்திரனை முன்னிட்டுக் கொண்டு க்ஷீரசமுத்திரத்தையடைந்து ஆகாய வீதியில் நின்றபடியே, ஆதிசேஷனைப் பாயலாகக்கொண்டு யோக நித்திரைபுரியும் ஸ்ரீமந்நாராயண பகவானை ஓலமிட்டழைக் கவே கிருபாசமுத்திரமாகிய திருமால் பாயலை விட் டெழுந்து, 'தேவர்களே, நீங்கள் என்னைக்கிட்டிய கருத்தை யறிந்தேன். நீங்கள் கவலையை யொழிக்கக்கடவீர்; பரம துஷ்டனாய் உலகத்தைவாட்டுகின்ற இந்தக் காலநேமியை அதிசீக்கிரத்தில் ஒழிவுகாண்போம். சுகமாக விருப்பிடஞ்

செல்லக்கடவீர்' என, அபயம் கொடுத்தனுப்பிவிட்டார்.

## காலநேமி வதம்

இனி, காலநேமி சங்காரத்தையும் அவனைச் சித்திர வதைபுரிந்து தேவர்க்குற்ற இடுக்கணைக் களைதற்குக் கருவியாய் நின்ற சக்கரத்தாழ்வானைச் சுத்திகரித்தற்காக ஸ்ரீ பகவான் திருமுக்குளத்தை ஏற்படுத்திய வரலாற்றையும் பின்னர் வடபத்ரசயனம் அந்த திவ்விய தடாகத்திற்கு சிறிது தூரத்திலமைந்த அற்புதத்தையும் ஸ்ரீ வில்லிநகரமமைந்த புதுமையையும் அதன்பின்னர் நேர்ந்த திவ்விய அவதாரங்களையும் எடுத்துச் சொல்வேன் எனச் சூதமுனிவர் கூறவே சௌனகாதிமுனிவர் உடலம்பூரித்து 'கேட்கக் கேட்கச் சுவை அதிகரித்துவராநின்ற வராகக்ஷேத்திர வைபவங்களை சிரத்தையோடும் செவியமுதங் கொள்ளாநின்றோம், திருவுளம் மகிழ்ந்துரை செய்யவேண்டும்' எனப் பிரார்த்தித்தனர். சூதமுனிவர் அவர்களது பக்தியையும் சிரத்தையையுங் கொண்டாடிக் கூறுவாராயினர்.

ஓ முனிவர்காள், பகவானிடம் அபயம் பெற்றுத் திருப்பாற்கடலை விட்டகன்ற வானவர் கூட்டம் காலநேமிக்குப்பயந்து தேவலோகத்தைக்கிட்டாமல் சண்பகாரண்ணியத்துட்புகுந்து மறைவாகத் தவம்புரிந்து பகவான் வருகையை எதிர்பார்த்து நின்றனர். இங்ஙனம் சண்பகாடவியை யடைந்து தேவர்கள் கரந்துறைவதை யறிந்த காலநேமி திரும்பவும் அந்த அரண்ணியத்தைக்கிட்டி பேரிடுக்கண் விளைவிப்பானாயினன், இவனது பீடையால் துக்கசாகரத்துள் அழுந்திநின்ற வானவரும் இருடியரும் கிட்டைகூடி அந்தரங்கமாக ஸ்ரீமந்நாராயண பகவானை நாடவே அவர் சங்குசக்கிரதாரியாய் கருடவாகனத்தை யூர்ந்து பிரத்தியக்ஷ சேவையுதவி மனம் வாடித்தவித்த தேவர்களுக்கு அபயங்கொடுத்துவிட்டு துராத்மாவான

காலநேமியோடு லீலையாக யுத்தந்தொடங்கினர். அப்போழ்து பகவான் பக்கல் தேவர்களும் காலநேமியின் பக்கம் அசுரரும் வந்துகூடவே தேவரும் அசுரரும் ஒருவரையொருவர் எதிர்த்துக் கடும்போர்புரிந்து வந்தனர். அசுரர் மிகவும் வல்லமைகொண்டு வீராவேசத்தோடு போர்புரிந்ததால் தேவர்கள் அவர்களை எதிர்த்து நிற்கமாட்டாமல் சிதறியோடிப்போய் பகவானைச் சரணம் புகுந்தனர். காரியம் இங்ஙனம் மிஞ்சிவருவதைக்கண்ட திருமால் கணப்பொழுதில் அசுர சேனையைப் பிணக்காடாக்கிப் பின்னர் சிறிது பொழுது காலநேமியோடு லீலாமாத்ரமாகப் போர்புரிந்து தமது கையிற் கோடி சூரியப்பிரகாசமாய் விளங்கிநின்ற சக்கரப்படையை நோக்கி 'நீ கணப்பொழுதில் இந்தக் காலநேமியைச் சித்திரவதஞ் செய்து வரக்கடவாய்' என ஆக்ஞாபித்து அனுப்பிவிட்டு சண்பகாரண்ணியத்தைவிட்டு விலகி கிழக்கே சிறிது தூரத்தில் நிலவளமும் நீர்வளமுங்கொண்டு மிக்க எழிலுடன் விளங்கிய வோரிடத்தி லெழுந்தருளி யிருந்தார். எம்பெருமானது கட்டளையைத் தலைமேற் கொண்ட ஸ்ரீ சக்கரத்தாழ்வார் நாலுபக்கத்தும் நெருப்பையுமிழ்ந்து கரகரவெனச்சுழன்று சென்று சாதுக்களுக்கு பேரிடுக்கண் விளைத்த படுபாவியாகிய காலநேமியினுடலத்தைப் பற்பல கண்டங்களாகத் துணித்துவிட்டுப் பின்னர் எஞ்சிநின்ற அசுரப்படைகளையுங்கொன்று குவித்துவிட்டுச் சிறிது நேரத்தில் பகவான் சந்நிதியைக்கிட்டி கைகூப்பி நின்றார்.

## திருமுக்குளமுண்டான காதை

இங்ஙனம், எவராலும் வெல்லமுடியாத வலிபடைத்த கொடும்பாவியாகிய காலநேமியைச் சக்கரத்தாழ்வார் முடிவு கண்டுவந்து நிற்பதைக்கண்ட தேவகணங்களும் முனிவர் கூட்டமும் ஆனந்தமேலீட்டால் தம்வயமிழந்து

கர்த்தனஞ்செய்தார்கள். கார்வண்ணனுகிய திருமால் அசுர சங்காரத்தால் இரத்தமும் மாம்சமும்படிந்த சக்கரத்தாழ்வாரை கடைக்கண்ணுல் ஆசிர்வதித்து அவ்வாழ்வாரை தூயராகும்படி செய்தற்பொருட்டு கங்கை, யமுனே, சரஸ்வதியாகிய மூன்று தெய்வநதிகளையும் மனத்தால் நாடவே அவை அங்ஙனமே வந்து சுதரிசனத்தை நீராட்டவே அந்த திவ்விய சக்கரம் யதாப்பிரகாரம் பகவானது கையில் வந்தமர்ந்தது. நதிகள் மூன்றும் பெண்ணுருக்கொண்டு பகவான் அருகில் நின்றன. அப்போழ்து தேவர்களும் முனிகணங்களும் பகவானைக் கைகூப்பி 'ஏ, தீனதயாளு, அடியேங்கள் செய்யும் விண்ணப்பமொன்றுளது. இந்த தெய்வ நதிகள் மூன்றும் லோகோபகாரமாக இவண்டைந்து மாந்தரது பாபங்களைப் போக்கும்படிக்கும், பகவானுகிய நீரும் இவண் நித்தியவாசஞ் செய்யும்படிக்கும் வேண்டுகின்ருேம்' எனக்குறை யிரந்தனர்.

அங்ஙனமே பகவான் அவர்கள் கோறியபடி, 'இந்த தெய்வநதிகள் மூன்றும் இங்கு ஒன்றுகூடி பிரயாகைக்குச் சமானமாக இவ்விடத்தில் திரவேணியாகிய தடாகமாகவமையும் (திரிவேணி யென்பது தமிழில் திருமுக்குளம் திருமக்குளம் எனப்பெயர் கொண்டு விளங்காநின்றது) நாமும் இங்கே உகந்து நித்தியவாசஞ் செய்வோம், மற்றும் ஏதேனும் வரம் வேண்டினும் தருவோம், கேட்குதிர்' என வருளினர்.

---

## வடபத்ர சயனம்

### உண்டான காதை

இங்ஙனம் தானே கனிந்த கனியாய் ஸ்ரீ பகவான் தேவர்களையும் இருடியரையும் நோக்கித் திருவாய்மலர்ந்தருளவே அன்னேர் அவரை மற்றும் பணிந்து, 'ஒ புரு

ஷோத்தமா, நீர் பாற்கடலில் ஆலிலைமேற் பள்ளிகொள்ளும் கோலத்துடன் இந்த திவ்விய தடாகத்திற்குச் சமீபமாய் உபயதேவிகளோடும் கோயில் கொண்டருளின் திவ்விய ஸ்நானமும் திவ்விய சேவையும் கிட்டி எவர்களும் உஜ்ஜீவிக்க வழியாகும்' எனப்பிரார்த்தித்தனர். உடனே பகவான் 'நீங்கள் விரும்பும் வண்ணமே யாவும் அமையு' மெனக்கூறி மறைந்தருளினார்.

பின்னர், தேவர்களும் இருடியரும் திரிவேணியைவிட்டு அடிபெயர்க்கவே சிறிது தூரத்தில் பல சாகைகளைத்தாங்கி பலவிடத்தும் விழுதுகளைவிட்டு வானுறவோங்கிய வடவால விருக்ஷத்தைக் கண்ணுற்று அந்த தெய்வீக விருக்ஷத்தைக் கிட்டியபோழ்து அவண் ஆலிலைமேற் பகவான் அறிதுயில் கொள்ள, அவரது பாதபதுமங்களை ஸ்ரீ தேவியும் பூதேவியும் வருட, உந்தியந்தாமரையி லிருக்கும் பிரமதேவர் துதித்து வணங்க, பிரமவிருடிகள் அஞ்சலிசெய்ய; இத்தகைய கோலத்தோடு ஸ்ரீயப்பதி யோகநித்திரை கொள்வதைக் கண்குளிர சேவைசெய்தனர். பின்னர் இம்முனிவரர் சாஷ்டாங்கமாக எம்பெருமானார் திருவடிகளில் வீழ்ந்து ஓர் வரங்கேட்கலுற்றனர். 'ஏ, கேசவா, இத்தகைய கோலத்துடன் நீர் இவண் நித்தியவாசஞ்செய்து எங்களை உய்விக்கவேண்டும்'' எனப்பிரார்த்திக்கவே பகவான் அவர்களைப் பேரன்போடு நோக்கி, 'உத்தம பக்தர்காள், நாம் இப்போழ்து உங்களுக்குச் சாதித்திருக்கும் இக் கோலத்தை நீங்கள் திவ்வியமங்கள விக்ரகமாக வமைத்து நம்மை உள்ளன்போடு வழிபடக்கடவீர்; நாம் அதன்கண் பூர்ணமாக ஆவிர்பவித்து பக்தர்களுக்கு சித்தி முத்திகளை யுதவுவோம். இத்தலம் வடேஸ்வர புரமெனவனுதியான பெயரமைந்துளது. நாம் இவண் ஆலிலைமேற் பள்ளிகொள்வதால் இத்தலம் வடபத்ரசயனம் எனப்பெயர்

பெற்றிலங்கும். அரண்ணியத்தின் மத்தியிலமைந்துள இத் தலத்தைச் சுற்றிப்பின்னர் ஓர் வேடுவவரசனால் ஓர் நகரமுமமையும். இவையன்றியும் கருடாழ்வார் அந்நகரத்தில் உத்தமகுலத்திலவதாரமாகி நமது புகழை தமிழிலிசைத்து திராவிடவேதமாகப் பரவச்செய்வார். பின்னர் பூதேவியும் அந்நகரில் அவருக்குப் புத்திரியாக உற்பவித்து உபநிடதப்பொருளை தமிழ்மொழியில் அகப்பொருடறைகளாக வெளிப்படுத்தி எம்பால் அவளுக்கு அமைந்திருக்கும் பேரன்பை உலகினர் உய்ய பேரின்ப மழையாகப் பொழிவள்' என வருங்காலத்திய அதிசயங்களைக் குறிப்பாற் காட்டி மின்னல் மேகத்துள் மறைவதுபோல் உருக்கரந்தார்.

பகவான் அருளிய வண்ணமே இருடியர் ஸ்ரீ பகவானது திவ்வியமங்கள வடிவத்தை அர்ச்சாவடிவமாக பிரதிஷ்டைசெய்து வழிபட்டு விஷ்ணு சாயுஜ்ஜியத்தைப் பெற்றனர். அதுமுதல் இதுவரையும் அத்தலம் பக்தர்களது கோறிக்கையை ஈடேற்றி சர்வாபீஷ்டங்களையும் உதவிவராநின்றது.

---

## ஸ்ரீ வில்லிபுத்தூர்

### எனும் திருநகரமுண்டான காதை

இங்ஙனம் சூதமுனிவர் நைமிசாரண்ணிய வாசிகளாகிய தபோதனர்களுக்குக் கூறிவருங்கால் அவர்கள் பகவானை புராணிகரை மிகவும் வழுத்தி, 'பிரபு, கர்ணாமிர்தமான தங்களது திருவாக்கால் வடபத்ரசயன முண்டான மகத்துவத்தைக் கேட்டு உடலம்பூரித்தோம்; இனி உத்தம நகரமாகிய ஸ்ரீ வில்லிபுத்தூர் உற்பத்தியான வரலாற்றையும் பின்னர் அதன்கண் கருடபகவானும் பூதேவியும் அவ

தரித்து வேதார்த்தங்களை தமிழிசையால் வெளிப்படுத்தி தமிழ்நாட்டை உய்விக்கச்செய்த அற்புதங்களையும் விரிவாக வும் விளக்கமாகவும் அருளிச் செய்யவேண்டு' மெனப் பிரார்த்தித்தனர்.

முனிபுங்கவர் அவர்களது வாசகங்களால் மிகவும் மன மகிழ்ந்து, 'ஓ, முனிவர்காள், ஸ்ரீ பகவான் காதைகள் நெஞ் சத்தை நெகிழ்வித்து பக்தியை விளைவித்து முத்திக்கு வாயிலாயிருப்பனவாம்; உங்களது சிரத்தையை நோக்க எனக்கு ஆனந்தம் விளையாநின்றது. சுத்த ஹிருதயத் துடன் கேட்கக்கடவீர்' எனக்கூறி ஸ்ரீ வில்லிபுத்தூர் மான் மியத்தை இயம்புவாராயினர்.

ஓ, உத்தம பாகவதசிரோமணிகாள், பாண்டிநாட் டிற்குத் திலகமாய் இந்த வராகக்ஷேத்திரத்திலுளதாய இந்த திவ்விய நகரம் புதிதாய் உண்டான நகரமாதலின் புத்தூ ரெனவும், வில்லி என்னும் வேடராஜனது முயற்சியால் இங்ஙனம் புதிதாய் உற்பவமாயினமையால் வில்லிபுத்தூ ரெனவும், பின்னர் பூலக்ஷ்மி யவ்விடத்திலவதாரமான கார ணத்தால், ஸ்ரீ வில்லிபுத்தூரெனவும் எங்கணும் பிரசித்தி பெற்று விளங்காநிற்கும். வில்லியின் காதையை விரிவாகக் கூறி இந்நகரமுண்டான வரலாற்றை விளங்கவுரைக்கிறேன்.

பூர்வம் கங்காதீரத்தில் மனுஷசஞ்சாரமற்ற ஓர் அடவி யில் சில உத்தமமுனிவர்கள் ஐம்பொறியடக்கி, முத்தியின் கண் சித்தத்தைநாட்டி ஸ்ரீ ஹரிபகவானையே தியானமாக அரிய தவஞ்செய்து கொண்டிருந்தனர். அந்தணர் மரபி லுதித்த இம்முனிவர்கள் தவஞ்செய்யும் ஸ்தானத்திற்கு சற்று சமீபத்தில் சுற்றத்தொடர்பை முழுமுற்றுந்துறந்து நிராசையை பெருந்தனமாகக்கொண்டு சத்தைநாடும் நாட் டமே கண்ணாக ஒருவேடர் ஏகாந்தமாக பிரமத்தியான பரராய் ஓர் குகைக்குள் தவஞ்செய்வாராயினர். அந்தண

மரபிலுதித்த தபோதனர்கள் இங்ஙனம் தாம் தவம்புரியும் அரண்ணியத்தில் தங்களுக்குச் சமீபமாக ஓர் வேடன் தவ மார்க்கத்திலுறைவதைக் காணவே அவர்கள் இழிகுலத் துதித்த அந்த வேடருடைய அந்தரங்க பக்குவத்தை யுண ராதவர்களாய் பண்டைத் தீவினையாலுந்தப்பட்டு அந்த உத்தமனான பரமஹம்சரை கோபாவேசத்தோடு நோக்கி, 'ஏ, துராத்மா, இழிகுலத்துதித்த வேடனாகிய நீ தொழு குலத்துதித்த நாங்கள் தவம்புரியும் ஆசிரமத்திற்கு சமீபத் தில் வாசஞ்செய்ய உனக்கு யாதே யோக்கியதை? இனிக் கணப்பொழுதும் ஆலசியஞ் செய்யாது விரைவில் இந்த தபோவனத்தைவிட்டு அகன்று செல்லடா' வெனக் கடு கடுத்த மொழிகளைப் பிரயோகஞ்செய்தனர். அப்போழ்து அந்த வேடர் சிகாமணி யவர்களை நோக்கி, 'ஓ, சாதுக்களே, கேண்மின், நீங்கள் கூறும் வண்ணம் நான் வேடர் மரபி லுதித்தவனேயாயினும், நான் அன்னோர் செயல்களைச் சிறிதும் கைகொண்டவனல்லன். அனைத்துயிர்களையும் என் னுயிர்போல் பாவித்து ஒரு ஜீவனுக்கும் எள்ளளவும் இடுக் கண் விளைக்காது யோகநிஷ்டையிலிராநின்றேன். அன்றி யும் ஒருவன் மிலேச்சமரபிலுதித்தவனே யானாலும் அவ னிடம் உள்ளபடி ஹரிபக்தி குடிகொண்டுறையுமாயின் அவனை சாதுக்கள் உத்தமனென்று கருதாநிற்பர். நானும் உலகமயக்கத்தையொழித்து விஷயவிருப்பங்களைக் கடிந்து சாதுக்களது சாமீப்பியமே நல்லகதிக்கு வாயிலாகுமென வெண்ணி இவ்வடவியை யடைந்து பரமநிஷ்டையை வகித் துளேன். ஒருவருக்கும் ஒருவித விடையூறும் கருதினவ னல்லவே' யென மிகவும் பணிந்து கூறினபோதிலும் மூர்க்க னும் முதலையும் கொண்டதை விடாவெனக் கூறியபடி கடி னச் சித்தம்படைத்த அம்முனிவர்கள் ஒரேபிடிவாதமாக அவரை மிகவுந் தொந்தரவுசெய்து மற்றோர் அரண்ணியத்

திற்கு ஓடும்படி விரட்டினார்கள். இவர்களுள் இருவர் அந்த தபோநிதியின் பிராணனை எடுக்கிறதற்கும் சித்தமாக விருந்தார்கள்.

இங்ஙனம் மகாதபசியை அவ்வனத்திலிருந்து வேறு வனஞ்செல்லும்படி ஓட்டிய முனிவர்கள் தமது ஆசிரியருறையும் ஆசிரமத்தைக்கிட்டி அவரிடம் தாங்கள் இழிகுல வேடனை அவ்வனத்தினின்று ஓட்டிவிட்ட கதையை எடுத்துரைத்தனர். ஹரிபக்தியும் திரிகாலவுணர்ச்சியும் ஒருங்கே யமையப்பெற்ற அந்தக் குருவானவர் அவர்களது செயலை யறிந்து அபராதம் நேர்ந்ததோ வில்லையோ வென்பதை யறிவதற்காக தியானத்திருந்து வேடர் மரபிலுதித்த அந்த பரமஹம்சரை மனோதிருஷ்டியில் நாடவே அவரது உயர்ந்த சீலமும் பரநாட்டமும் கரைகடந்த தவவலியும் யாவும் உள்ளங்கை நெல்லிக்கனிபோற் தெற்றென விளங்கவே அவர் மிகவும் திடுக்கிட்டுத் தமது தொண்டர்களை நோக்கி, 'அறிவு புறம்போய மூடர்களே, என்னவிதமான துர்க்கிர்த்தியஞ் செய்தீர்கள்! அந்த முனிவரது மகத்துவத்தை யோர் சிறிதும் நீங்கள் உணரவில்லை. அவர் பரமநிஷ்டர், தேகாந்தத்தில் இப்பிறப்பிலேயே முத்தியடைபவர்; முற்பிறவியிலும் பிரம்மஞ்ஞானி; ஹரிபக்தியிலும் சிறப்புற்றவர் ஏதோ தவக்குறைவால் சபரமரபிலுதித்துளார். பெரிய அபராதத்தை இழைத்துவிட்டீர்கள். எங்ஙனம் உய்யப் போகின்றீர்கள்! அந்தப் பரமஹம்சரைக்கிட்டி அவரது அனுக்கிரகத்தை நீங்கள் பெற்றாலன்றி உங்கட்கு நற்கதிக்கு வேறு வழிகிடையாது' எனச் செப்பினர்.

ஆசான், இங்ஙனம் அவர்களைச் சினந்து கூறவே அவர்கள் அனைவரும் உடலம் நடுங்கினர்; சபரரைக் கொல்தற்கும் துணிவுகொண்டுநின்ற முனிவர் இருவரும் பட்ட பாட்டை என் சொல்வது! ஆசானையிட்டுக்கொண்டு முனி

வர் குழாம் சூத்திர குலத்துதித்த பரமஹம்சரைநாடிச் சென்றனர்.

அவரைக் காணவே யாவரும் சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து அம்முனிபுங்கவரை மிகவும் உபசாரமாக அவரது தவச்சாலையாகிய குகைக்கு இட்டுக்கொண்டு வந்தார்கள். பின்பு அம்முனி கணங்களது ஆசான் சபரமுனிவரை மிகவும் வணக்கத்துடன் வேண்டிக் கொள்வாராயினர்.

"ஓ, தபோநிதே! உமது மகிமையை ஓர் சிறிதும் உணராத பேதைகள் ஊழ்வினையால் உந்தப்பட்டு ஏதோ செய்தற்குக்கூடாத அபராதத்தை உமக்கு இழைத்துவிட்டார்கள். இப்போழ்து அவர்கள் படும் அனுதாபம் உரைக்கடங்காது. குணமென்னும் குன்றேறி நிற்கும் பெருந்தகாய், உமது வெகுளி இவர்கள் பாற்செல்லுமாயின், பிறவியறுப்பதற்காக இதுவரை இவர்கள் பட்டபாடெல்லாம் அதோகதியாய் விடும். ஆதலின் இவர்களுக்கு உமது அனுக்கிரகம் வேண்டற்பால' தெனக் குறையிரந்தனர்.

மிகுந்த தபோபலம் பெற்ற சபரமுனிவர் அவ்வந்தண முனிவரையினிது நோக்கி, 'ஓ, முனிபுங்கவ, நான் இவர்கள் பேதமையாலியற்றிய அபராதத்தை மன்னித்தேன். இவர்கள் மரணகால பரியந்தம் இந்த அடவியிலேயே தவஞ்செய்க. உடலம் துறந்தபின் இவர்கள் பாண்டியநாட்டிலும் சோழதேசத்திலும் வதிகின்ற பிரமத்தியானங்கொண்ட அந்தணர் மரபில் பிறக்கும் போழ்தே தத்துவஞான முடையவர்களாக வவதரித்து பிறப்பறுத்து முக்தியைக்கிட்டுவர். இவர்களுள் எனது உயிரைப்போக்கப் பார்த்த இரண்டு பிராமணர்களும் வெஞ்சினங் கொண்ட வேடர்களைப்போல் அருளை முழுமுற்றும் கைவிட்டு என்பாலொழுகினமையால்

வில்லியின் முற்பிறப்பு

இவ்விருவரும் தேகாந்தத்தில் கிராதர் மரபிற் பிறப்பார்கள். ஆயினும் இவர்களது தவப்பயனுய் இவர்கள் பாண்டி நாட்டிலுள்ள வராகக்ஷேத்திரத்தின் கீழக்கோடியிலுள்ள மல்லிமாநகர்க்கண் அந்நகரையாளும் வேடராஜனுக்குப் புதல்வராக வவதரித்துப் பின்னர் தாமிருவரும் அந்நகரை யாண்டு வருங்காலத்தில் ஓர்நாள் வேட்டை மேற்கொண்டு அந்நகர்க்கு மேற்குத் திக்கிலுள்ள அடவியை யடையவே அவர்களுள் கண்டனென்பவன் ஓர் வேங்கைக் கிரையாகி உயிர்போம் அமையம் விட்டகுறையாகிய பூர்வதவம் உதவிசெய்ய விஷ்ணு சாயுஜ்ஜியத்தைப் பெறுவன், வில்லியெனும் பெயர் கொண்ட மற்றவனுக்கு ஸ்ரீ நாராயண பகவான் பூர்ணுநுக்கிரகஞ்செய்து அவனுற் சில கைங்கிரியங்களை யேற்றுக்கொண்டு பின்னர் அவனுக்கும் தமது சாயுஜ்ஜியத்தைக் கொடுப்பார். கவலையொழிந்து இருப்பிடஞ் சென்று தவஞ்செய்யக்கடவீ' ரெனச் சொல்லி, அவர்களை யனுப்பிவிட்டார்' எனச் சூதமுனிவர் கூறிவருவாராயினர்.

அப்போழ்து, சௌனகாதி இருடியர் சூதமாமுனிவரை அஞ்சலிசெய்து, 'ஓ, பகவானே, உமது திவ்விய வசனங்களால் சில வுறுதிகள் எங்களுக்கு விசிதமாயின; காமம், வெகுளி, மயக்கம் எனும் மூன்று துர்க்குணங்களும் பிறப்பை பயப்பனவென்ன நூலோர் கூறுவர்; தேவகதியிலிருந்த நகுஷன் காமவயத்தனுகி மலைப்பாம்பாய் பிறந்தான்; அடங்காக் கோபத்திற்காளாகி பிரமநிஷ்டர்களான முனிவர்கள் சபரமுனிவர்க்கு இடுக்கண் விளைத்ததால் அப் பிறப்பிலேயே முக்தியடைவதைவிட்டு மறுஜன்மத்தில் மோக்ஷம் பெறலாயிற்று. தபசிகளுக்குச் சாந்தம் இல்லாவிடில் அவர் தவம் இடையூறெய்தி பலனை நீட்டித்துத் தரும். ஆயினும் தவம் வீண்போவதில்லை என்பதையும் கண்டுகொண்டோம். அன்றியும் பெரியார்க்கு தீங்கிழைப்

பதைப்போன்ற பாவம் வேறொன்றுமின் றென்பதையும் தெளியலானோம். ஓ, பகவானே, இனி தேவரீர் ஸ்ரீ வில்லி புத்தூரெனும் நகரம் உற்பவமான வரலாற்றை விளக்க மாகக்கூறி கருடபகவானும் பூலக்ஷ்மியும் அந்நகரில் அவ தாரஞ்செய்து உலகத்தை உய்வித்த சரிதங்களையும் எங்கட் கனுக்கிரஞ் செய்யவேண்டு' மெனப் பிரார்த்தித்தனர்.

---

## வில்லியின் சரிதம்

சௌனகாதிகளது வேண்டுகோளை மிகப்பிரீதியாக அங்கீகரித்துக்கொண்டு சூதமாமுனிவர் கூறுவாராயினர்.

ஓ, தபோதனர்களே, கங்காநதிக்கடுத்த அடவியிலே தவஞ்செய்துவந்த பிரம்மநிஷ்டர்களுள் அவர்களது ஆசான் தேகாந்தத்தில் பிரஹ்ம சாயுஜ்ஜியம் பெற்றனர். பிறரோ, இங்ஙனம் முக்தி கைகூடாமல், தேகம் விழுந்தபின் பாண்டிநாட்டிலும், சோழதேசத்திலும் உத்தமகுலத்தில் பூர்வஞானத்தோடு உற்பவஞ்செய்து தேகமுடிவில் விஷ்ணு சாயுஜ்ஜியத்தைப் பெற்றனர். சபரமுனிவரை மரணபயத் திற்குள்ளாக்கிய இருவரும் மரணத்தின்பின் பூர்வஞானத் தையிழந்து வராக க்ஷேத்திரத்தின் கீழக்கோடியிலுள்ள மல்லிமாநகரத்தை யாண்டுவந்த வேடராஜனுக்குப் புத்திர ராகப் பிறந்தனர். இவர்களுள் மூத்தவனுக்கு வில்லி என் றும் இளையவனுக்கு கண்டனென்றும் நாமகரணம் செய்யப் பட்டது. வேடர் மரபிற்கியைந்த வீரசூரபராக்கிரமங்க ளெல்லாம் கூடவே வளர்தர இச்சிறுவர் யௌவனமடைந்து பின்னர் தாமிருவருமே அந்நகரத்திற்கு அதிபதிகளாகி அரசாக்ஷி செய்துவந்தனர்.

ஓர் நாள் இவ்விருவரும் வேட்டையின்கண் ஆர்வ மெய்தி வேடர்கள் பலர் இருபுறமும் புடைசூழ மல்லி

நகர்க்கு மேற்கிலுள்ள வெயிலும் நுழைதற்கரிய கானகத்துள் பிரவேசித்து பன்றி மான் முதலிய விலங்குகளை வேட்டையாடினர்.

கண்டன் மோக்ஷம் பெற்றது

இவர்களுள் கண்டனெனும் அரசிளந்தோன்றல் மிக வுக்ரமாக வேட்டையாடிக்கொண்டு அரண்ணியத்தின் இருதயத்துட்புகுந்தகாலை ஓர்கடுவாய் திர்ப்படவே, அந்த வேங்கையைக் கணையால் எய்து வீழ்த்தலாமென அம்பை விசைகொண்டு எய்யவே, அது குறிதப்பியதால் வியாக்ரம் மகாவுக்ரத்தோடு இவன்மேற் பாயவே இவன் அதைக் குத்தி வீழ்த்தினும் இவனது பிராமணன் தேகத்தில் நிற்கலாற்றுது பிரியுந்தருணத்தில் பூர்வஜன்ம வாசனையால் ஸ்ரீ ஹரியினது தியானம் உதிக்கவே வடபத்ரசாயி அவனுக்குப் பிரத்தியக்ஷமாக சேவைதந்து அவனுக்குத் தமது சாயுஜ்ஜியத்தை உடனே கொடுத்தார். நிற்க.

வில்லியோ தனது தம்பி திரும்பித் தன்னையடையாமையால் காடெல்லாம் அவனைத் தேடித்திரிந்து ஓர்குறியுங் கிட்டாமல் சோர்வடைந்து ஒரு மரத்தடியில் அயர்ந்து நித்திரை புரிவானுயினன். அப்போழ்து அவனது பூர்வஜன்மத் தவப்பயன் கை கூடியதால் ஸ்ரீ பகவான் சங்குசக்கரதாரியாக அவனது சொற்பனத்திற் காட்சியுதவி அவனை நோக்கி, 'அப்பா, வில்லி! நீயேன் மனம் வாடி நித்திரை புரிகின்ருய்? அதிசூரனுகிய நினது தம்பி புதர்கள் நெருங்கிய இந்தக் காட்டில் ஓர் பெரும்புலியோடு யுத்தஞ்செய்து அதனைக்கொன்று தானும் உயிர் நீத்துக் கிடக்கின்ருன். பிராணன் பிரியும் அமையத்தில் நாம் நமது திவ்விய சேவையைத்தந்து அவனை ஐக்கியம் பண்ணிக்கொண்டோம். அவன் நித்திய சூரிகளிலொருவனுக

வில்லிகண்ட திவ்விய சொற்பனம்

வாழ்கின்றான். என்னை நன்றாய் அறிந்துகொள். நான் இந்த அடவியில் ஓரிடத்தில் ஆலிலைமேற் பள்ளிகொண் டுறைகின்றேன். நானே வடபத்ரசாயி என்னைத் தான் பாகவதசிகாமணிகள் மகாவிஷ்ணுவென்றும், நாராயண னென்றும், வைகுண்டபதியென்றும் பலவித நாமங்களால் தோத்திரஞ்செய்வர். நான் இக்கானகத்தில் யோகநித்திரை புரியும் இடத்தைக் கண்டு எனக்குக் கோயில் எடுப்பித்து ஓர் நகரத்தையும் உண்டாக்கக்கடவாய். இதற்கனுகூல மாக நீ பாண்டியராஜனைக் காணவேண்டும். நாம் அவ னுக்கு சொற்பனத்திற்றோன்றி உனது வரவை யவனுக் குணர்த்துவோம். அவனது உதவியால் பாண்டியநாட்டி லும் சோழதேசத்திலுமிருந்து பிரமவித்துக்களான பெரி யோர்களை அழைப்பித்து நீ நிர்மாணஞ்செய்யும் நகர்க்கண் குடியேற்றக்கடவாய். உன்னால் நிர்மாணமாகப்போகின்ற நகரம் உனது பெயரால் வில்லிபுத்தூரெனப் பிரசித்தி பெறும். பின்னர் புவிலக்ஷ்மி யிவ்விடத்திலுற்பவமாகப் போவதால் அது ஸ்ரீ வில்லிபுத்தூரென எவராலும் கொண் டாடப்படும் முக்கிய திருப்பதியாகும். இங்ஙனம் எனது பணிவிடையை நீ செய்து முடித்தபின் உனக்கு மோக்ஷத் தைக் கொடுப்போம்' எனக்கூறினர். இங்ஙனம் பகவான் பிரத்தியக்ஷமாகி தமது அருள்வாக்காற்கூறிய வுறுதிகளைச் செவி யமுதமாகக்கொண்டு உள்ளமும் உடலமும் பூரித்த வில்லி திடுக்கிட்டெழுந்து விழித்த பின்னும் தனது ஊனக் கண்ணிற்கும் எட்டும் வண்ணம் தரிசனங் கொடுத்துக் கொண்டு நின்ற பகவானைப் பன்முறை நமஸ்காரஞ்செய்து ஒரு விண்ணப்பஞ் செய்வான். 'ஏ, ஜகதீசா, இவ்வடர்ந்த காட்டினிடத்தே நீர் ஆலிலைமேற் பள்ளிகொண்டுறையு மிடத்தை எங்ஙனம் காண்பேன்? எனது தம்பி உயிர் நீத் துக்கிடக்குமிடத்தை எங்ஙனங்கண்டு அவனுக்காக வேண்

டிய உத்தரகிரியைகளை முடித்து அவனைத் தகனஞ்செய்வேன்?' எனக்குறையிரந்தான். அப்போழ்து பகவான் 'ஏ, அன்பனே, கட்டெறும்புக் கூட்டமொன்று உனக்கு தெய்வீகமாக வழிகாட்டாநிற்கும். உனது பரிஜனங்கள் இப்போழ்தே வந்து கூடுவார்கள். அக்கட்டெறும்புக் கூட்டம் காட்டும் வழியாக வனத்தை பண்படுத்திகொண்டு சென்று: நாம் உறையும் தலத்தை நீ வந்தடைந்து என்னைக் தரிசனஞ்செய்து என்னைச் சுற்றிலுமுள்ளக் காட்டைத் களைந்து பண்படுத்தும்படி செய்துவிட்டுப் பின்னர் கட்டெறும்புக்கூட்டம் மற்றும் வழிகாட்டாநிற்ப, நீ உனது தம்பியின் உடலத்தைக் கண்டு அவனுக்காக வேண்டிய உத்தரகிரியைகளை முடித்துவிட்டுப் பின்னர் பாண்டிய ராஜனையடைந்து அவனது உதவியால் எனக்குக் கோயில் எடுப்பித்து நகரத்தையும் நிர்மாணஞ்செய்வாயாக' வெனக் கூறி அந்தர்த்தானமாயினர்.

## வில்லிபுத்தூர் நகர நிர்மாணம்

பகவானது திவ்விய தரிசனத்தால் மெய்மறந்து நின்ற வேடராஜன் பகவான் மறையவே தன்னைச் சுற்றிலும் தனது பரிஜனங்கள் கூடிநிற்பதைக் கண்டான். தனக்கு நேர்ந்த திவ்விய சேவையை யவர்களுக்கொடுத்துக் கூறிய வளவில், திடீரென கட்டெறும்புக்கூட்டம் சங்கிலி கோத்தாற்போல அவ்விடத்தினின்றோடுவதை யாவரும் கண்டு அந்தச்சாரி செல்லும் வழியைப் பண்படுத்திக்கொண்டு செல்லவே, தருக்களும் செடிகளும் கொடிகளும் அடர்ந்து திவ்விய கந்தம் வீசாநின்றவோர் பொதும்பருள் தேவ கணங்களாலும் தேவயிருடிகளாலும் நிர்மாணஞ் செய்யப்பட்ட விமானத்துள் ஆலிலைமேற் ஸ்ரீ பகவான் அர்ச்சா வடிவங்கொண்டு யோகநித்திரைபுரிவது தரிசனமாகவே வில்லியும் அவனது பரிஜனங்களும் உடலம்பூரித்துக் கண்

கள் குளிரக்கண்டு தொழுது செப்புதற்கரிய ஆனந்த சாகரத்துள் மூழ்கினார்கள். உடனே வில்லி தனது பரிஜனங்களை நோக்கி 'நீங்கள் இந்தப் பகவானுறையும் விமானத்தைச் சுற்றிலுமுள்ளக் காட்டைக் களையக்கடவீர்; நான் எனது தம்பியையக்கண்டு உத்தரகிரியைகளை முடித்து வருகிறே'னென ஆக்ஞைசெய்துவிட்டுச் சிலமனிதரைத் தன்னுடன் வரும்படி ஏவியவளவில் கட்டெறும்பின் கூட்டம் முன்போல வழிகாட்டிக்கொண்டு சென்று கண்டன் வீரசொர்க்கம் பெற்றுக் கிடக்குமிடத்திற் கொண்டுய்த்தது. உயிர் நீத்துக்கிடந்த தம்பியையும் அவன் அயலே குத்துண்டு மாய்ந்துகிடந்த வேங்கையையுங்கண்டு ஒருபக்கம் துக்கமும் ஓர்பக்கம் ஆச்சரியமுமடைந்து வில்லி தனது தம்பியின் சௌரியத்தையும் பகவானருளால் அவன் மோக்ஷம் பெற்றதையும் நினைத்து மனந்தேறி, அயலே சிறிது தூரத்திற்றோன்றிய திவ்விய தடாகமாகிய திருமுக்குளத்திலிருந்து புனிதஜலத்தைக் கொணர்வித்து தம்பியை நீராட்டிப்பின்னர் தகனஞ்செய்தான்.

பின்னர் கடுகெனவோடி ஆலிலைமேற் பள்ளிகொண்ட வைகுண்டநாதனைத் தரிசித்து அவரை சுற்றிலுமிருந்த காடுகள் தனது பரிஜனங்களால் பண்படுத்தப்பட்டிருப்பதை நோக்கி மனங்களித்து, பகவானருளிய உத்தரவை தலைமேற்கொண்டு மல்லிநகரை யடைந்து சில காணிக்கைகளைக் கையிற்கொண்டு மதுரையம்பதிக்கு விரைந்து செல்வானாயினன். வில்லியின் வரவை பகவான் சொற்பனத்தில் முன்னமே யுணர்த்தியிருந்தமையின் பாண்டியன் வேடராஜனை அன்புடன் வரவேற்றான். சிற்பத்தில் வல்லவரான கம்மியரும் மற்றை வேலையாட்களும் உடனே வரவழைக்கப் பட்டனர்.

பாண்டியனது அனுமதிபெற்று வில்லி சிற்பிகளும்

மற்றைக் கம்மாளரும் வேறு வேலையாட்களும் தன்னைப் புடைசூழ மல்லிநகரை வந்தடைந்து அவர்கட்கெல்லாம் தக்கவிருந்து செய்வித்து நல்ல முகூர்த்தத்தில் வடபத்ர சாயி உறைதரும் திவ்விய பூமியையடைந்து கோயிற்றிருப் பணியை முதலில் முடித்துவிட்டுப் பின்னர் நால்வகை வரு ணத்தாரும் இனிது வாழுதற்கியன்றதாய் நகரத்தை கம்மிய ரால் நிர்மாணஞ்செய்தான்.

பின்னர், வேடர்கோன் வடபத்ர சயனரைத் தொழுது அவரது அருளைத் துணைகொண்டு பாண்டியனை யடைந்து ஆலயமும் நகரமுமமைந்த சிறப்பை அரசனிடம் அறிக்கையிட்டான். பாண்டியன் தக்க தூதர்களையனுப்பி தந்நாட்டிலும் சோழதேசத்திலுமுள்ள வேதவித்துக் களான உத்தம அந்தணர்களையும் மற்றை மூன்று வருணத் திலுமுள்ள குணவான்களையும் வரவழைத்து அவர்களை யிட்டுக்கொண்டு வில்லிபுத்தூரை நோக்கி வில்லியுடன் விஜயஞ்செய்வானாயினன்.

ஆலயத்தின் திருமதில்களும் சிகரங்களும் தூரத்தே தரிசனமானவளவில் யாவரும் பரவசமெய்தி காந்தத்தா லீர்க்கப்படும் இருப்புத் துண்டங்கள்போல் பகவானது அருளாலிழுக்கப்பட்டு சிரமேற்கூப்பிய கையராய் பரந்தா மன் யோகசித்திரைபுரியும் கோயில் வாயிலையடைந்து பன் முறையும் நமஸ்காரஞ்செய்து ஆலயத்துட்பிரவேசித்தனர். பாண்டியனும், வில்லியும், ஆலிலைமேற் பள்ளிகொண்டுறை யும் பரந்தாமனைக் காணவே அவர்களுக்குற்ற பூரிப்பை யென் சொல்வது!

ஸ்ரீமந் நாராயணனது பூரணவருளைப் பெற்றுநின்ற வேடராஜனாகிய வில்லியைப் பாண்டியன் மிகவுங்கொண் டாடினன். வில்லியோ பாண்டியனை வணங்கி 'பிரபு, உமது உதவியைக் கொண்டல்லவோ பகவானது கைங்கரி

யம் முட்டின்றி நிறைவேறியது; பகவானுடைய அருளிற்கு நீரே மிக்க உத்தமபாத்திரமாயினீ' ரெனப் பாண்டியனைப் புகழ்ந்த வசனங்களால் மகிழ்வித்தான்.

சோழநாட்டிலிருந்தும் பாண்டியதேசத்தின் பற்பல விடங்களிலிருந்தும் நகரத்திற் குடியேறுதற்காகவந்த அந்தணர் முதலாய நான்கு வருணத்தவர்களும் அவரவர்களுக்கேற்படுத்தப்பட்ட மாளிகைகளிலும் இல்லங்களிலும் அமர்ந்து வருணாச்சிரம தர்மங்களைச் சரிவர நடத்திவருவாராயினர்.

நித்திய பூஜையும் திருவிழாக்களும் ஒழுங்காக எக்காலத்தும் நடக்கும் வண்ணம் பாண்டியனும் வில்லியும் சட்டதிட்டங்களை ஏற்படுத்தி தக்க மானியங்களை கோயிற்கு சேர்ப்பித்தனர்.

வில்லியினிடம் செலவு பெற்றுக்கொண்டு பாண்டியன் தனது ராஜஸ்தானமாகிய மதுரையம்பதிக்குத் தனது பரிவாரங்களோடும் போய்ச்சேர்ந்தான். மகாபக்தனான வில்லி பிரதிதினமும் வடபெருங்கோயிலுடையானை அன்போடும் வழிபட்டு நித்திய பூஜையும் திருவிழாக்களும் செவ்வனே நடந்துவராநிற்ப பகவானுக்கு மென்மேலும் ஈடுபட்டு தேகாந்தத்தில் விஷ்ணுசாயுஜ்ஜியத்தைப் பெற்றான்.

அக்காலந்தொட்டு இத்திருநகரம் வில்லிபுத்தூரென எவராலும் கொண்டாடப்பட்ட திருப்பதியாக விளங்காநின்றது.

இனித் தெய்வீக அவதாரங்களாக பெரியாழ்வாரும் ஸ்ரீ ஆண்டாளும் உற்பவமான சரிதங்களைச் சொல்லுகிறேன் எனச் சூதமாமுனிவர் சௌனகாதி முனிகளுக்குக் கூறி வருவாராயினர்.

ஸ்ரீ ஆண்டாள் திருவடிகளேசரணம்.

---

ஸ்ரீ

ஸ்ரீஆண்டாள் திருவடிகளேசரணம்.

# ஆழ்வாராதிகள்

## மண்ணுலகில் அவதரித்த காரணம்

அப்பொழுது சௌனகாதி முனிவர்கள் பகவானுன சூத மாமுனிவரை மிகவும் வந்தனஞ்செய்து 'ஓ கிருபாநிதே, இனி பெரியாழ்வாரும் ஸ்ரீ ஆண்டாளும் மண்ணுலகில் அவதாரமான வரலாற்றைக் கேட்க எங்கட்கு மிகவும் ஆதரமுளது. பரமபதத்தில் ஸ்ரீயப்பதியைவிட்டு விலகா திருக்கும் கருடபகவானும் பூதேவியும் அவரை விட்டுப் பிரிந்து மண்ணுலகிற்பிறந்ததன் காரணத்தை முதலில் விளக்கஞ் செய்யும்படி வேண்டிக்கொள்கிறும் என விண் ணப்பஞ் செய்யவே சூதமாமுனிவர் சொல்வாராயினர்.

ஓ, தபோதனர்காள்! நீங்கள் கேட்டது மிகவும் சத்தான விஷயம். ஜீவகோடிகள் பிறவிக்கடலைவிட்டுக் கரையேறுவது எளிதான காரியமா! எண்ணரிய பிறவி களுள் மானிடப்பிறவியோ யாதினும் மிக வரியவொன்றும். விலங்குகள் இந்திரிய வயப்பட்டு தேகபோஷணத்தையும், புணர்ச்சியையும், களைத்தபோது தூக்கத்தையுமே விரும்பு வனவாம். மனிதனுக்கு விலங்கினத்திற்குரிய ஐந்தறிவு களோடுகூட ஆறும் அறிவாகிய மனமெனும் தத்துவமும் அமைந்துளது. இந்த உயர்ந்த தத்துவம் மனிதர்க்களிக்கப் பட்ட காரணத்தைநாடாது பாமரர் இந்திரிய சுகங்கள் ஒன்றையேநாடி வாணுளை வீணுளாகக் கழிக்காநின்றனர். 'நான் யார், இப்பிறவியின் முன்னம் எவணிருந்தேன். என்னை நாடகம் ஆட்டுவிக்கும் சூத்ரதாரன் யார்; எல் லாம்வல்ல ஆற்றலும் பேரறிவும் வாய்ந்த அந்தப் பரந்தா

யனை யெங்ஙனம் அறிந்து கிட்டுவது? எப்பொழுது இந்த உலகமாயையைத் தாண்டலாம்' எனும் வினுக்களைத் தமக்குள்ளே விளைத்துத் தம்மையும் தம்மைப் படைத்துக்காக்கும் கடவுளையும் நாடும் அறிவு மனிதனுள்ளிருப்பினும் இத்தகைய நல்வழிக்கு இக்கலியுகத்திற்றமது மதியைத் திருப்புவோர் தொகை மிகவுஞ் சுருக்கமாம்.

மாந்தர்கள் பிறவிக்கடலைத்தாண்டி நித்தியவாழ்வைப் பெறும்பொருட்டு பகவான் பல வழிகளாலும் முயன்று கொண்டேயிருக்கிறுர். வேதாதிகலைகள் முதலில் ஏற்பட்டன. அதனுல் நற்பயனைத்தேடிப் பகவானை யடைந்தவர் சிலரே. பின்னர் எளிதே மோக்ஷ சூக்ஷமத்தைக் கண்டு கரையேற அஷ்டாக்ஷரப் பிரஹ்மவித்தையை வெளியிட்டார். அதுவும் தக்க பலனைத்தராமற்போயிற்று. பின்னர் தர்மார்த்த காமமோக்ஷத்தினியல்புகளைத்தாமே புவியிலுற் பவித்து அநுஷ்டித்துக் காட்டுதற்காக ஸ்ரீராம கிருஷ்ணுதி அவதாரங்களை யெடுத்து உலகத்தை யியன்றவாறு சீர் திருத்தியும் பக்தியாகிய வழி நன்கு திறக்கப்படவில்லை.

ஸ்ரீயப்பதி ஜீவர்களிடத்தே மற்றும் பரிவெய்தி சிறிது பக்குவம் வாய்ந்தவர்களையேனும் பிறவி சாகரத்திலிருந்து கடிதிற்றாக்கிவிட்டுப் பேரானந்த வாழ்வுட்புகுத்த வேண்டுமெனப் பூரணச்சித்தம் கொண்டு, வேடர்கள் காட்டில் வாழும் மானினங்களைப் பிடிக்கத் தாம் வளர்த்த மான்களை முன்னுகவிட்டு அவற்றைத் தம்வயப்படுத்துவதுபோன்ற சூட்சியைத் திருவுளத்தடைந்து தம்முடன் நித்தியவாசஞ் செய்யும் பூதேவி, பெரிய திருவடி, சேனை முதலியார், பூஷணம், ஆசனம் முதலான பரிஜனங்களை இனிது நோக்கி, 'எம்மிடம் கணப்பொழுதும் அன்பு குறையாத தொண்டர்காள்! ஜகம் நல்வழிப்படுதற்காக உங்களாலாக வேண்டிய காரியமொன்றுளது. கலிபிறந்தகால் தருமங்கள் தலை

தடுமாறிப்போயின. கிட்டுதற்கரிய மானிடப்பிறவி லபித்த வழியும் மதியை நமது பக்கல் திருப்பி பிறவிக்கடலைக் கடக்க நினைவெழாது மிருகவியல்பைக் கொண்டு பிரஜை களுட்பெரும்பாலார் காலத்தை யவலமாக்கி அதோ கதிக்கே யாளாகா நின்றனர். சிறிது நன்மதிபடைத்தவர் களும் நாத்திகரது சங்கமத்தால் நல்வழிப்படுகின்றார்க ளில்லை. நீருள் தடுமாறி மூழ்கி பிரக்ஞாபங்க முற்றுக் கிடப்பவரை தீரராயினோர் தாமும் தண்ணீருள் ஆழ்ந்து கிட்டி அவர்களைக் கரையேற்றிப் பிரக்ஞையை யுதவுவது போல, எம்மிடம் நீங்காத பேரன்பை வகித்த நீங்கள் உலகரக்ஷணார்த்தம் ஜகமாயையுட்புகுந்து பற்பல வர்ணங் களில் அவதரித்து பக்குவம் வாய்ந்தவர்களை பரமபதத்திற் காளாக்கி ஏனையோர்களுக்கு பக்தியின் வழியை நன்றாக தரிசிப்பிக்கக்கடவீர். எம்மிடம் குன்றாத அன்புகொண்ட வர்களாதலினால் ஜகமாயை உங்களை மிகவும் மருட்டாது, நமது அருள் உங்களோடுகூடவே உலாவிக்கொண்டிருந்து நீங்கள் புவியிலுற்பவித்து உங்களது பணிகளை முடித்தபின் உங்களை எம்மிடம் திரும்பக்கொண்டுவந்து சேர்க்கும்; ஆதலின் மன ஆயாசமின்றி ஜகத்துள் அவதாரஞ் செய்யக் கடவீர், பூதேவியும் தக்க காலத்தில் பூமியில் உற்பவித்து பேரன்பு இத்தகைய தென்பதை திராவிட சுருதியாலும் தமது வாழ்க்கை நலத்தாலும் தெற்றெனவிளக்கி மோக்ஷ வாசலை திறந்துவிடுவாள். உலகிலுள்ள உத்தமர்கள் உங்க ளாலே சீக்கிரத்தில் பிறவிச் சுழலைத்தாண்டி முக்திக் கரை யைக்கிட்ட வல்லவராவர்' என ஆக்ஞை செய்தார். ஸ்ரீ பகவானது அபிப்பிராயத்தை நன்குணர்ந்து கொண்ட அவரது பரிஜனங்கள் அங்ஙனமே எந்நாடுகளிலும் சிறந்த தான தமிழ் நாட்டில் பற்பல வருணங்களிலும் தொழுகு லம் இழிகுலமெனும் பகுப்பின்றி எல்லா ஜாதிகளிலும்

பிறந்து பகவத்பக்தியை விளக்கங்காட்டி மோக்ஷோபாயத்தை பாமரரும் எளிதே யுணருமாறு திராவிடவேதத்தைப் பேரன்புடன் வெளியிட்டார்கள். நீங்கள் கேட்டுக்கொண்ட வண்ணம் ஆழ்வாராதிகள் மண்ணுலகிலவதரிக்க நேர்ந்த காரணத்தைப் பொதுவாக வெளியிட்டோம். இனிப் பெரிய திருவடி மண்ணுலகிற் பிறந்த காதையை வெளியிடுவோம் ஊன்றிய கவனத்தோடு கேட்கக்கடவீர்.

---

ஸ்ரீ

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.

## பெரியாழ்வார் அவதாரம்

ஓ, தபோதனர்காள், விண்ணிலுறையும் தேவர்கள் உலகரக்ஷணார்த்தம் பரந்தாமனது அனுமதிபெற்று மண்ணுலகிலிறங்கி உர்பவமாவதே அவதாரங்களெனக் கூறப்படும். இங்ஙனம் தேவர்கள் அவதாரஞ் செய்யுங்கால் அவரவர் மேற்கொண்ட பணிவிடைகளை முடித்தற்கனுகூலமான க்ஷேத்திரங்களிலேயே பிறப்பார்கள் வில்லியின் காலத்திலேயே பிரமவித்துக்களாலும் வேதவித்துக்களாலும் குடியேறப்பட்ட வில்லிபுத்தூர் யாகாதி கிருத்தியங்களை ஒழுங்காக நடாத்தி பகவத் பக்தியாலுஞ் சிறந்த அந்தணர்கள் மென்மேலும் விருத்திபடைய பூலோக வைகுண்டம்போல் விளங்கி வளராநின்றது. நிற்க.

ஆயினும் பௌத்தம் ஆருகதம் முதலான புறச்சமயங்கள் மற்றைய இடங்களிற்றலை யெடுத்து வளர்ந்து வேத தர்மங்களுக்குப் பெரிய இடையூற்றை விளைவித்தன விஷ்ணு பக்தி குன்றிப்போயிற்று. க்ஷீரசமுத்திரத்தில் ஆலிலைமேற் பள்ளிகொள்ளும் பகவான் உலகம் தீயவழியிற்றலை தடுமாறுதலைக் கண்டு, அருகில் நின்று தம்மைச் சேவித்து நிற்கும் கருடபகவானை இனிது நோக்கி, ‘உலகம்

ஈடேறும் வண்ணம் நீர்புவியிலவதரிக்கவேண்டிய தருணம் இதுவே, வேதத்திற்குப் புறம்பான மதங்கள் பரவி வேத தர்மங்களேயும் நம்மிடத்துள்ள பக்தியையும் குன்றச் செய்து உலகம் நெறியல்லா நெறிபற்றி யொழுகாநின்றது. நீர் மண்ணுலகிலுதித்து வேத தருமங்களை நிலைநிறுத்தி வைஷ்ணவ சித்தாந்தத்தைத்தாபித்து பக்திமார்க்கத்தை திராவிடவேத ரூபமாக விளக்கங்காட்டிவிட்டுப் பின்னர் திரும்பவும் நம்மை வந்தணுகலாகும். நமதருள் உம்மை விட்டகலாது,எக்காலத்தும் உமக்குத் துணைநிற்கும். வில்லி புத்தூர், நீர் இனிதே அவதரிக்கத்தக்க க்ஷேத்திரம்; இனித் தாமதம் வேண்டாம்' என ஆக்ஞாபிக்கவே பெரிய திரு வடியார் திருவாக்குக்கு எதிர் வாக்குரைத்தற்கு அஞ்சி 'பகவானே, உம்மிடம் எனக்கு மறவாத பக்தியமையின் நான் உய்வேன், திருவுளப்பாங்கின்படி மண்ணுலகிற் பிறந்து எனக்கிட்ட பணிவிடையைச் செய்யாநிற்பேன்' எனச் செலவுபெற்று மின்னல் மேகத்துள் மறைவதுபோல் வைகுண்டத்தைவிட்டு ஜகமாயையுட்புகுந்தார்.

நடுவே வடபெருங் கோயிலுடையான் ஆலயமும், சுற்றிலும் அந்தணரிருக்கையு மமையப்பெற்று பூலோக வைகுண்டமென விளங்கிய வில்லிபுத்தூரில் அந்தணர் குலத்தில் மூங்கிற் கொடியார் மரபில் மகாபாகவதரான முகுந்தர் இப்பிறப்பிலும் முற்பிறவிகளிலும் இயற்றிய தவத்தின் பலனுக அவரது பத்னியாராகிய பதுமையார் திருவயிற்றில் ஆயிரஞ் சங்கங்கள் நடுவண் வலம்புரி சங்கம் உதயமாவதுபோல் அந்தணர் குலம் தழைத்தோங்க திவ்விய தேஜசோடுகூட பெரிய திருவடியின் அம்சமாக ஓர் ஆண்குழந்தை உற்பவித்தது.

குழந்தையினது தேகலாவண்ணியத்தையும் வதனத் தின் வசிகரத்தையுங்கண்டு அகமகிழ்வுற்ற தந்தையார்

தமது அரும்புதல்வர்க்கு ஜாதகர்மாதி சம்ஸ்காரங்களை ஒழுங்காக நடாத்தி விண்டுசித்தன் எனும் நாமத்தைச் சூட்டினர். நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமு மாகக் குழவியைச் சீரோடு அருமைபாராட்டி வளர்த்து வருவாராயினர். நடைகற்று மழலைச் சொற்களாடத் தெரிந்த வமையத்திலேயே இந்த தெய்வீகக் குழந்தைக்குத் தனக்குத் தெரியாதே வடபெருங்கோயிலிற் பள்ளிகொண் டுறையும் வடபத்ரசயனரிடம் பேரன்பு விளைந்தது. தந்தை யும் தாயரும் அடிக்கடி தமது அரும்புத்திரனைக் கோயிற் கிட்டுக்கொண்டுபோய் பகவான் சந்நிதியில் விளையாட விடுவது வழக்கம். ஐந்தாவது வயது நிரையவே அக்ஷராப் பியாசம் தொடக்கமானது, ஏழாம் வயதில் உபநயனம் செவ்வனே நடத்தப்பட்டது. சிறு பிராயத்திலேயே பக வானது பற்பல வவதாரங்களுள் அவர் புரிந்த லீலைகளைப் பெரியவர்களிடம் கேட்டறிந்த குழந்தையார்க்கு எம் பெருமான் பக்கல் பக்தி மென்மேலும் முறுகி வளர்ந்து கொண்டேவந்தது. ஆயர்பாடியில் ஸ்ரீ கிருஷ்ண பகவான் புரிந்த லீலைகளைக் கேட்ட மாத்திரத்தில், குழந்தையார்க் குண்டான பேரானந்தக் களிப்பை என் சொல்வது! வட பெருங் கோயிலுடையானையே ஸ்ரீ கிருஷ்ண பகவானென வெண்ணி, அரைக்கணத்தும் அவரை மறவாத பேரன் போடு வழிபட்டுப் பின்னர் குருகுலவாசத்திற் கருக ராகித் தமதாசிரியர் பக்கல் சகல கலைகளையும் ஓதி வருவா ராயினர். குருகுலவாசம் முடிவுற்றபோழ்து ஆசிரியர்க் குத்தக்கபடி தக்ஷிணை யுதவி அவரது ஆசீர்வாதத்தைப் பெற்று இல்லறத்துறையி லிறங்குதற்காக தமது சொந்த மாளிகைக்குத் திரும்பினர்.

ஸ்ரீ கிருஷ்ண பகவான் பக்கல் வேரூன்றிய பேரன் பைக்கொண்ட விண்டுசித்தர் வடபெருங்கோயி லுடையா

னையே கிருஷ்ண பரமாத்மாவாகக் கொண்டு அநுதினமும் மூன்றுகாலத்தும் அவரது ஆலயத்திற்குச் சென்று எம்பெருமானுரைக் கண்குளிரச்சேவை செய்துகொண்டு காலத்தை யோட்டாநிற்புழி, ஓர்தினம் பரந்தாமனைத் தொழும் போழ்து வடபத்ரசயனாரணிந்திருந்த துளவமாலையினின்று என்றும் வெளிப்படாத தேவகந்தம் புலப்பட்டது. இத்தகைய பரிமளத்தால் பரவசமெய்திய பெரியாழ்வார், 'எம்பெருமானுர்க்கு மிக்க பிரீதியை விளைவிப்பது துளவமாலையே போலும், நான் எனது காலத்தை எம்பெருமானுர்க்குகந்த பணிவிடைக்கண் செலவழியாது வீணே கடத்தினேனே' எனப் பெரிதும் வருந்தி தமது பொருளில் பெரும்பாகத்தைக் கொண்டு ஓர் நந்தவனம் ஏற்படுத்தி அவ்விடத்தில் துளபச்செடிகளையும், மல்லிகை பிச்சி, முல்லை, இருவாட்சி, செண்பகம், பாதிரி முதலான நறுமணங்கமழும் மலர்களைத்தரவல்ல பற்பல புஷ்பச்செடிகளையும் அமைத்து மிக்க ஆதரத்துடன் அவற்றை பரிபாலித்து வருவாராயினர். அன்றியும் அருணேதயத்திற்கு முன்பேயெழுந்து புஷ்பங்களை வண்டு குடையாமுன்னம் திருப்பூங்கூடைகளி லெடுத்து துளப பத்திரத்தையும் சேகரித்துக்கொண்டு பரிசுத்தமான விடத்திலிருந்து நானுவிதமான மாலைகளைக்கட்டி எம்பெருமானுக்குச் சாத்திவந்தார்.

நந்தவனகைங்கரியமும் பூமாலைகைங்கரியமுமே தமது பெருவாழ்வாகக் கொண்டு இப்பணிவிடைகளிற் சற்றும் சலிப்புவராது பகவானுக்குத் தொண்டு செய்யும் பெரியாழ்வார் தாம் எடுத்துக் கொண்ட பணிவிடைக்கு மிகவும் சாதகமாகவோர் உத்தமபத்னியை விதிப்படி மணமாலை சூடி இல்லறத்தையும் பகவத் கைங்கரியத்தையும் செவ்வனே நடத்தி ஈசுவரபக்தியில் மென்மேலுமீடுபட்டு ஜீவன் முக்தராக விளங்கிவந்தார்.

## ஆழ்வார் பொற்கிழியறுத்தது

இங்ஙனம் பத்னியும் தானும் வடபத்ரசாயிக்கு உத்தமமான தொண்டர்களாய் பகவானுடைய பணிவிடையையே பேரானந்த வாழ்வாகக் கொண்டு ஒழுகி வரும்போழ்து, ஆழ்வார் எப்பணிமுடித்தற்காக மண்ணுலகத்தில் உதிக்க நேர்ந்ததோ அப்பணி சமீபித்தது.

அக்காலம் தமிழ்நாட்டில் வேதத்திற்கு புறம்பான ஆருகதம் பௌத்தம் முதலிய சமயங்கள் எழுந்து வேத தர்மங்களையும் பகவத் பக்தியையும் ஓங்கிவளராவண்ணம் சிரத்தையைக் குறைத்தன. பாண்டிய நாட்டின் தலைநகரமாகிய மதுரையில் வல்லபதேவன் எனும் பெயர் கொண்ட பாண்டியன் நீதிவழுவாது அரசு புரிந்துவந்தான். சத்தியவந்தனாகிய இவ்வரசன் ஓரிரவு தனது வழக்கப்படி மாறுவேஷம் பூண்டு நகரசோதனை செய்துவருங்கால் ஓரந்தணன் வீட்டுத்திண்ணையில் வழிப்போக்கனான ஓர் பிராமணன் பகவத்தியானம் பண்ணிக்கொண் டிருப்பதைக் கண்டு அவரைக்கிட்டி நமஸ்காரஞ்செய்து அவரைநோக்கி, 'ஓ, பிராமணசிகாமணி, நீர் யார்? சகாயமின்றித் தனியே படுத்திருக்கின்றீரே!' என வினவினன். அவர் 'ஐயா, நான் ஓர் பிராமணன், யாத்திரைவாசி, கங்காஸ்நானஞ் செய்துகொண்டு இப்போழ்து சேதுவிற்குச் செல்லாநின்றேன்' எனக்கூறினர். அரசன் மகிழ்ந்து 'இவர் பரமசாதுவாக விருக்கின்றார். இவரோடு சிறிது சம்பாஷணம் புரியினும் ஆத்மாவிற்கு ஹிதத்தைத்தராநிற்கும்' எனக்கருதி அவரது க்ஷேமலாபங்களையுசாவிய பின்னர் அவரை நோக்கி, 'ஐயரே, நீர் திவ்விய தேசங்களை யெல்லாம் தரிசித்தவராயிருக்கின்றீர்; வேதாதிகலைகளையும் கற்றுணர்ந்தவராகவும் இருக்கின்றீர்; பரமசாதுக்களது தரிசனம் உமக்குக் கிட்டியிருக்கும்; அவர்களோடு சத்காலக்ஷேபம் செய்

திருப்பீர். மாயாஜாலத்திற் சிக்கிக்கொண்ட மார்தர்க்கு அதனைவிட்டுத் தப்பவல்ல வுறுதியைப் பயக்கவல்லவேதேனு மோர் வாக்கியத்தைத் திருவாய் மலர்ந்தருள்க' வென வேண்டிக் கொண்டான். அப்போழ்து அந்த யாத்திரை வாசி அவரை மகிழ்ச்சியுடன் நோக்கி, 'ஓ, உத்தமபுருஷா! சத்தாகிய விஷயத்தை யறிவதில் வேரூன்றிய சிரத்தை கொண்டவரே! உமக்கு யான் யாதே கூறவலலேன்; ஏதோ, நீர் என்னைக் கேட்டுக் கொள்கிறபடியால், ஏதோ எனக்குத் தெரிந்த வொன்றைக் கூறுகிறேன், செவிக் கொண்மின்' எனக்கூறி, ஓர் திவ்விய சுலோகத்தை வெளி யிட்டார். அஃது,—

வர்ஷார்த் தமஷ்டௌப்ரய தேத மாஸான்
நிஸார்த் தமர்த்தம் தியஸம்ய தேத
வார்த்திக்ய ஹேதோர் வயஸான வேன
பரத்ர ஹேதோரிஹ ஜன்ம நாச்சா.

இங்ஙனம், சுலோகத்தையருளி அரசனை நோக்கி, 'பெரிய வரே, இதனது பொருளைச் செவ்வனே யறிந்துகொள்ளும்; இதன் அர்த்தம்,

'ஒருவன் மழைகாலத்திற்கு வேண்டிய சௌகரியங் களை மற்றை எட்டுமாதங்களிலும் தேடிக்கொள்ளவேண் டும்; இராத்திரிக்கு வேண்டியவற்றை பகலிலேயே தேடிக் கொள்ளவேண்டும்; வயோதிக பர்வத்திற்கு வேண்டிய வற்றை யௌவனத்திலேயே தேடிக்கொள்ளவேண்டும்; பரகதிக்கு வழியையோ, இந்த ஜன்ம முழுவதுமே நாடிக் கொண்டிருக்கவேண்டும்' என விளங்க வெடுத்துரைத்தார். கோடையின் வெப்பத்தால் வாடிநின்ற புல்லில் மழை பெய்தாற் போன்ற இவ்வுபதேசத்தால், அரசனது மனோ நிலை உடனே மாறிற்று. அழியாநிலை யெதுவென் நாடும் சிரத்தை மீதூர்ந்தெழுந்தது. உலகத்தில் வெறுப்பும் நித்தி

யானந்தத்தில் விருப்பும் விளைந்தது. யாத்திரைவாசியாகிய அந்தணரிடம் செலவுபெற்று தனது மாளிகையையடைந்து இரவுமுழுவதும் நித்திரையின்றி பரகதி நாட்டத்தில் சிந்தையை நிறுத்தினன்

உதயகாலம் வரவே அரசனெழுந்து நித்திய கர்மானுஷ்டானத்தை முடித்துக்கொண்டு தனது சபாமண்டபத்தை யணுகவே பல பெரியோர்கள் வந்திருப்பதைக் கண்டு அவர்களோடு மிகுந்த சிரத்தையோடு பரதத்துவத்தினியல்பைப்பற்றியும் மோக்ஷநெறியைப்பற்றியும் சம்பாஷித்தான். ஒருவரும் அவனது மனம் திடம்பெறுமாறு பரநிலையையேனும் மோக்ஷவாயிலையேனும் விளக்கஞ் செய்யக் கூடவில்லை. அப்போழ்து பரமபாகவதரும், வேதமுணர்ந்தவரும், சமஸ்தான புரோகிதருமாகிய செல்வநம்பியெனும் அந்தணர் ராஜசபைக்கு வந்தார். அரசன் அவரை நல்வரவேற்றுத்தக்க ஆசனத்திருத்தியபின் அவரையும் மற்றை அறிஞரையும் விளித்து யாவரும் வியக்கும் வண்ணம் ஒன்று சொல்வானாயினன்.

அறிஞர்காள்! எனது சித்தம் சத்தியத்தில் வேரூன்றி நிற்கின்றது. இந்த ஜகமாயையைக் கிழித்து முடிவான மெய்ந்நிலையை யுணர்ந்து பரமசாந்தியையடைய முயல்வதே கற்றதனாலாய பயனும். திருவருளின் துணையின்றி இந்த நிலையையடையக் கருதுவது புணையினுதவியின்றி நீந்தி சமுத்திரத்தைக்கடக்க முயல்வதை யொக்கும். சமயவாதிகள் பலரும் தத்தம் மதங்களே முக்திநிலையைக்காட்டவல்லதெனவாய் மதங்கொண்டு அரற்றுநிற்பர். கடவுளது சக்தியாகிய திருவருள் மறைவாக உலகத்தை நடத்துவிக்கின்ற வுண்மையை ஒரு சமயமும் மறுக்காது. திருவருள் எனக்கு எங்ஙனம் கிட்டி நான் பரமனையடைந்து அழியாப்பதவியில் வைகவல்லேன்! நான் கடைத்தேற

வல்ல வழியை எனக்கு எவரே காட்டவல்லார்! நான் என்ன செய்தால் மெய்யையறிய வழியுண்டாகும்? அறிஞர்களாகிய நீங்கள் ஒன்றுகூடி ஆலோசித்து நான் செய்ய வேண்டியது இன்னதெனவோர் முடிவுசெய்யுங்கள். அங்ஙனமே செய்து பரமனது அருளை எவ்வாற்றானுங்கிட்டுகிறேன்.

இங்ஙனம் அரசன் பரமசிரத்தையோடு சபையிலிருந்த அறிஞர்க்குத் தனது கருத்தை வெளியிடவே சபையாரது கருத்துகளை செல்வநம்பியார் அறிந்துகொண்டு அரசனை நோக்கிக் கூறுவாராயினர்.

'முடிவான மெய்ந்நிலையையறிந்து கடைத்தேற சித்தங்கொண்ட உத்தமபுருஷனான பாண்டிய மகாராஜனே! நீர் உத்தமமான சிரத்தையைக் கொண்டதால் நீர் பரமனது அருளிற்குப் பாத்திரமாய் விட்டீர். நாங்கள் கூறும் உபாயப்படி நீர் செய்யவேண்டும். அது யாதெனில் அளவிறந்த நிதியடங்கிய ஓர் பொற்கிழியை இந்த சபையிற்றொங்க விட்டுப் பற்பல நாடுகளிலுமுள்ள பலவகை சமயத்தாரும் அறியும்பொருட்டு ஒரு விளம்பரமுகத்தால், 'இவ்வுலகில் கடவுளை நாடுகின்ற சமயங்கள் பலவாம். அச்சமயங்களில் பரமபுருஷனையுள்ளபடி காட்டவல்ல மெய்ந்நெறி இன்னதெனத் தெளியாது ஓர் சமயத்திலும் பற்றில்லாது அலமரா நின்றேன். ஆதலின் எச்சமயத்தாராயினும் அவரவரும் நமது சபைக்குவந்து பரம்பொருளின் தன்மையைப் பற்றிப் பேசலாம். இங்ஙனம் வாதம் புரியுங்கால் எந்த சத்தியவானுடைய வாக்கால் நான் கட்டியிருக்கும் பொற்கிழி அவருக்கு எளிதே கைவருமோ, அவரே அருளைக் கண்டவர், அவர் வழிபடும் தெய்வமே பரமாம். நான் அவரது சமயத்தைச்சார்ந்து கிருதார்த்தனுவேன்' எனப் பற்பல தேசங்களிலுமுள்ள மகான்கள், துறவிகள், பக்தர்

கள் முதலானவர்களுக் கெல்லாம் தெரிவியும். இதுவே மெய்யைப் புலன்சாணும் வழியாம்.

இங்ஙனம் செல்வநம்பியார் கூறவே அரசன் உடலமும் உள்ளமும் பூரித்துத் தமது புரோகிதர் கூறியபடியே பற்பல நாடுகட்கும் தூதரையனுப்பி விளம்பரமுகத்தால் தனது சித்தத்தை வெளிப்படுத்தினன் இதனைக்கேட்கவே பற்பல தேசங்களிலுமிருந்து பௌத்தர், ஆருகதர், மாயாவாதிகள், காபிலர், மிமாம்சகர், வையகரணர் முதலான பல சமய வித்வான்களும் மதுரையம்பதியைக் கிட்டுவாராயினர்.

இங்ஙனம் மதுரையில் நிகழ்வதை சர்வாந்தர்யாமியாகிய பகவான் வடபத்ரசாயி உணர்ந்தவராய் வேதப்புறம்பான பௌத்தம் ஜைனம் முதலான சமயங்களின் வளர்ச்சியால் விஷ்ணுபக்தி குன்றியிருப்பதைக் கண்டு அதனைத் திரும்பவும் உயர்த்தக் கருதி விண்டுசித்தரது சொற்பனத்தில் எழுந்தருளி, அவரைப் பூரணகடாக்ஷத்துடன் நோக்கி, 'ஓ, பெரியாழ்வாரே! நீர் செய்துவருங் கைங்கரியத்திற்குப் பெரிதும் அனுகூலமாக வைஷ்ணவ சித்தாந்தத்தை உலகிலே ஸ்தாபிக்கிறதற்குத்தக்க காலம் கிட்டியது. மதுரையம்பதியில் பாண்டியராஜன் விலையுயர்ந்த பொற்கிழி யொன்றைத் தனது சபையிற்றூங்க விட்டு 'எச்சமயத்தவர் தமது மதத்தை சித்தாந்தஞ்செய்வதால் நான் கட்டிய பொற்கிழியவர் வசம் வருமோ அந்த சமயமே மெய்ச்சமயமாம். நான் அச்சமயத்தைச் சார்வேன்' என நாடெங்கணும் பிரசித்தஞ் செய்திருந்தபடி பலவிடங்களிலுமிருந்து பண்டிதர் முதலான பெரியோர்கள் பொற்கிழியைக்கொள்ளுதற்காக மதுரைக்குவந்திருக்கிறார்கள். நீர் போய் அந்தப் பொன்முடிப்பை யறுத்து வரக்கடவீர்' எனக்கட்டளையிட்டார். இங்ஙனம் எம்பெரு

மான் அருளவே விண்டுசித்தர் மிகவும் திகைப்பெய்தி பக வானை நோக்கி 'என்னையாளுடையாய்! பாண்டியன் கட்டி யிருப்பது வித்யாசுல்கமல்லவா! சாஸ்திரங்களை யுணர்ந்த நிபுணர்களும், கல்விக்கரைகண்ட பெரியோரும், தர்க்க வாதஞ் செய்யவல்ல வித்வான்களும்கூடி ஒருவரோடொரு வர் எதிர்வாதஞ் செய்யும் அந்தச் சபையின்கண் கலை ஞானம் இன்னதெனவோர் சிறிதும் உணராத எளியேன் எங்ஙனம் அவர்களோடு வாதாடவல்லேன். நந்தனவன கைங்கரியமும் பூமாலை கட்டுதலுமாகிய உமது பணிவிடை யொன்றுமே வாழ்வாகக்கொண்ட நான் என் கையிலுள்ள கொட்டுத் தழும்பைக்காட்டியோ பொற்கிழி யறுப்பேன்' என்று முறையிட்டார். இவரது வார்த்தைகளை செவி யேற்றுக்கொண்ட வைகுண்டநாதன் சிறிது புன்முறுவல் கொண்டு அவரை மற்றும் அருளுடன் நோக்கி, 'குழந் தாய்! நீர்நமது ஆக்ஞையைக்கொண்டு பாண்டியன் சபைக் குச் செல்வதால் நமதருள் உம்மைத் தொடர்ந்தே கூட வரும். நான்கு வேதமும் மற்றைக் கலைகளும் உமதறி விற்கு ஒருவரும் சொல்லிக் கொடாமலே சுயமாக விளங் கும்; ஊக்கத்தோடுசென்று பாத்துவ நிர்ணயஞ்செய்து கிழியறுத்துவரக்கடவீர்' என ஆக்ஞைசெய்துவிட்டு மறைந் தருளினர்.

நித்திரையினின்றெழவே 'ஈதென்ன திவ்விய சொற் பனம்!' எனப் பரவசங்கொண்டு பகவானது அருளையே தலைமேற் கொண்டு புதுவையர்கோன் வில்லிநகரைவிட்டு புறப்பட்டு அதிசீக்கிரத்தில் மதுரையை யடைந்து பாண் டியனது சபைக்குட்புகுந்தார். அரசனும் அவனது புரோகி தர் செல்வநம்பியாரும் பிராமணோத்தமரான பெரியாழ் வாரைத்தக்கபடி யுபசரித்து தக்க ஆசனத்தில் அமரச் செய்தனர்.

இங்ஙனம் அரசனும் செல்வநம்பியாரும் ஆழ்வாருக்குச் சிறப்புச்செய்வதைக் கண்ணுற்ற வித்வான்கள் அரசனை நோக்கி, 'வேதாப்பியாசம் குன்றிய இவரை பேருபசாரம் செய்தது மற்றை அறிஞரை அவமதித்தபடியாகும்' என விசனிக்கவே, செல்வநம்பியார் அவர்களை நோக்கி 'நீங்கள் மகானுபாவராகிய இவ்வாழ்வாரை உள்ளபடி யறியாதவர்களாயிருப்ப, இவருக்கு வேதாப்பியாசம் குறைவென எங்ஙனம் மதித்தீர்கள்? எனக்கடிந்துவிட்டு விண்டுச்சித்தரை நோக்கி, 'ஓ, மகாத்மா! நீரோ பகவானது அருளைப்பூரணமாகப் பெற்று இவண் எழுந்தருளியிருக்கின்றீர். சுயப்பிரக்ஞைகொண்டு வாதாடும் மதப்பேயர்கள் மௌனமாகும் வண்ணம் பரத்துவ நிச்சயம் பண்ணத் திருவுளங் கொள்ளவேண்டுமெனப் பெரியாழ்வாரைத் தூண்டிவிட்டார்.

உடனே, விண்டுசித்தரெழுந்து நின்று பகவானைத் துதிசெய்யவே சர்வகலைகளும் எளிதில் விளங்கும் வண்ணம் ஞானவாணி அவரது நாவிலெழுந்தருளினள். பூர்வம் வால்மீகி முனிவர் விரிஞ்சனது பிரசாதத்தால் எல்லாம் வல்ல கவிஞராயினாற்போலவும், பாஞ்சசன்னியத்தின் பரிசத்தால் அரசிளங் குமாரனாகிய துருவன் முற்றறிவனானாற்போலவும் வடபெருங்கோயிலுடையான் இவர்பால்வைத்த பேரருளால் சகல கலாவல்லராகி அவண் குழுமியிருந்த பற்பல மதவாதிகளும் வெருக்கொளுமாறு குஞ்சரங்களின் மத்தியில் சிங்கம் கர்ஜ்ஜனம் செய்வதுபோல் வேதாகம புராண இதிகாசாதிமேற் கோள்களை எடுத்துக்காட்டி அக்கரங்களுள் அகரம் முதலாகவும் மற்றை யக்கரங்களுக்கு பிறப்பிடமாகவும் நிற்பதுபோல் ஸ்ரீமந்நாராயணனே தேவ சமூகங்கட்கெல்லாம் முதல்வனெனச் சித்தாந்தஞ் செய்யுங்கால் வித்யாசுல்கமாகத் தோரணத்திற் கட்டியிருந்த பொற்

கிழி சுயமாக ஆழ்வார் பக்கல் வளைந்துவந்து நிற்கவே புதுவையர்கோன் அதனை மிகப்பிரீதியோடு அறுத்தருளித் தம்பால் வைத்துக்கொண்டனர்.

அப்பொழுது ஓர் ஜயகோஷமுண்டாயிற்று. அமரர் மலர்மழை பொழிந்தனர், தேவதுந்துபி முழங்கிற்று. சபையிலிருந்த யாவரும் பெரியாழ்வாரடிகளில் விழுந்து நமஸ்காரஞ் செய்தார்கள். ஆழ்வாரது தெய்வீக வல்லமையைக்கண்ட அரசன் பரவசத்தால் பேரானந்தமயனாகி யாவரும் அறிய அவருக்குப் பட்டர்பிரான் எனும் விருது நாமத்தைச் சூட்டினான்.

பின்னர் பாண்டியன் விண்டுச்சித்தரை பட்டத்து யானை மேலேற்றி அவருக்குத்தானே கவரிவீச பெரியாழ்வார் ஊர்வலமாக பவனி வருவாராயினர். தொண்டர்களுக்கு நாயகமாகிய விண்டுச்சித்தர் இங்ஙனம் யாவரும் புகழ்ந்து கொண்டாடிச்சேவிக்க வீதிவலம் வரும்போழ்து ஸ்ரீ மாதவன் கருடவாகன சமேதராய் இந்திராதி தேவர்கள் புடைசூழ அவரது நேத்திரங்களுக்குத் தமது திவ்விய தரிசனத்தை யுதவினர். பட்டப்பகலிற்றமது ஊனக்கண்ணும் தரிசிக்குமாறு பகவான் பெரியாழ்வாருக்கு காட்சி தரவே அவருக்குண்டான பரவசத்தையும் பேரானந்தப் பேற்றையும் எங்ஙனமெடுத்துரைப்பது! பகவானது திவ்விய மங்கள விக்ரஹத்தை இருகண்களும் குளிருமாறு சேவைசெய்து தம்மை மறந்துநின்ற பட்டர்பிரான் பகவானது திருமேனியின் அழகையும், மென்மையையும், ஒளியையும், இளமையையுங்கண்டு தந்தை தாயர் தமது குழந்தையின் பேரழகைக் கண்டால் 'ஐயோ கண் திருஷ்டி பட்டால் என்செய்வதெனப்' பரிதவிப்பதுபோல், 'பரமபதத்தில் நித்தியசூரிகளால் தரிசனஞ்செய்யத்தக்க இந்த உத்தமப்பொருள், கலிநடமாடாநின்ற இம்மண்ணுலகில்

ஊனக்கண் கொண்ட மாந்தர்க்கு விஷயமாகத் தகுந்த தோ!' வெனப் பரிவெய்தி அந்த திவ்விய மங்கள சொரூபத்திற்கு யாதொரு ஹானியும் நேராவண்ணம் யானைமேலிருந்தபடியே அவ்யானையின் இருபக்கத்தும் தொங்கும் மணிகளிரண்டையும் தம்கையிற் றாளமாகக்கொண்டு,

பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு
பலகோடி நூறுயிரம்
மல்லாண்ட திண்டோள் மணிவண்ணாவுன்
சேவடி செவ்வி திருகாப்பு

எனத் திருக்காப்பிட்டு,

அடியோமோடும் நின்னோடும் பிரிவின்றியாயிரம் பல்லாண்டு
வடிவாய் நின்வலமார்பினில் வாழ்கின்றமங்கையும் பல்லாண்டு
வடிவார் சோதிவலத்துறையும் சுடராழியும் பல்லாண்டு
படைபோர் புக்குமுழங்கு மப்பாஞ்சசன்னியமும் பல்லாண்டே

என மற்றும் பதினொரு பாடல்களாற் பல்லாண்டு பாடி, அப்பாக்கள் ஒன்றில் செல்வநம்பியாரது பக்தியை வியந்து எம்பெருமானை மங்களாசாஸனஞ் செய்தருளினர். ஆழ்வார் பேரன்புகொண்டு தம்மேற் பாடிய திருப்பல்லாண்டை பரந்தாமன் மகாதிருப்தியோடு ஏற்றுக்கொண்டு அவரை நோக்கி, 'விண்டுச்சித்தரே, நீர் மற்றுஞ் சிலகாலம் புவியிலிருந்து விஷ்ணுபக்தியை விருத்திசெய்து திராவிட வேதத்தால் தமிழ்நாடெங்கும் நமது புகழைப்பரப்பி பக்தி வழியை உலகினர்க்கு நன்றாய்க் காட்டிவிட்டுப் பின்னர் நம்மை வந்தடையக்கடவீர்' என அனுக்கிரகஞ் செய்து விட்டு கட்புலனைவிட்டு உருக்கரந்தார்.

செல்வநம்பியாரும் அரசனும் பெரியாழ்வாரை வணங்கிப் புகழ்ந்து கொண்டாடி, 'உத்தம பக்தரான உமது மகிமையாலன்றோ நாங்கள் தேவர் கண்களுக்கும் எளிதிற் கிட்டமாட்டாத வைகுண்டபதியைக் கண்ணாரக்கண்டு கிரு

தார்த்தராஞேம்' எனப் பலவகையாலும் மகிழ்வித்தனர்.

விண்டுச்சித்தர் பொற்கிழியையும் மற்றும் அரசன் கொடுத்த வரிசைகளையுங்கொண்டு பக்தர் குழாம்புடை சூழத் திரும்பவும் வில்லிபுத்தூரை வந்தடைந்து எப்போதும்போல் நந்தனவன கைங்கர்யத்தையும் பூமாலை கட்டும் பணிவிடையையும் மேற்கொண்டு வளர்பிறைச் சந்திரன்போல வடபெருங்கோயிலுடையான் பக்கல் மென்மேலும் பக்திவளர்தர பேரானந்த வாழ்வுட்டிளைத்தனர்.

## ஆழ்வார் புரிந்த கைங்கர்யம்

அன்றியும் தாம் பாண்டியனிடம் பெற்றுவந்த பெருந்தன முழுமையும் வடபெருங்கோயிலுடையானது ஆலயப் பணிவிடைக்கும் பிரமோத்சவ கைங்கர்யங்களுக்கும் வினியோகித்து திருமதில்களும், மாடமாளிகைகளும், கோபுரங்களும் கட்டுவித்தார்.

நீலமேகவண்ணல் பக்கல் ஆழ்வாருக்கிருந்த பக்தியின் ஆழத்தை யாரே கணிக்கவல்லார்! அவதாரங்களுள் ஸ்ரீ கிருஷ்ணுவதாரத்தில் மிகவும் ஈடுபட்ட விண்டுச்சித்தர் இரவும் பகலும் கண்ணனுருவம் தம்மனக்கண்ணை விட்டகலாத பேரன்பைக் கொண்டதால், வான்மீகி முனிவருக்கு ஆதியில் ஸ்ரீராமர் பிறந்து வளர்ந்து கலியாணமாகி வனவாசஞ்செய்து சீதையைப்பிரிந்து, வானரர் உதவிபெற்று இராவணனைச் சங்கரித்து சீதையைமீட்டித் திரும்ப அயோத்திவந்து பட்டாபிஷேகம்பெற்றுப் பின்னர் அசுவமேதமியற்றி முடிவில் தமது திருவடிஜோதிக் கெழுந்தருளிய யாவும் பிரத்தியக்ஷமானதுபோல், கிருஷ்ணபகவானது பாலிய லீலைகள் யாவும் தாம் நேரிற்கண்ட அனுபவம்போல் கோசரமாகவே பகவானது பால்யத்தில் அசோதைப்பிராட்டியார் அவரை சீராட்டிப் பாலூட்டி வளர்த்த செயல்களையும் கோபிகளிடம் கண்ணன் புரிந்த

விளையாட்டுகளையும் மற்றை லீலைகளையும் மதுரமானத் தமிழ்ப்பாக்களால் உலகினர் ஈடேறும் வண்ணம் சகல லக்ஷணங்களையும் அமைத்து கவிமாரி பொழிந்தார். சிறிது ஸ்ரீராமபிரானது செயல்களையும் அங்ஙனமே ஆனந்த மேலீட்டால் தமிழ்ப்பாவா லெடுத்துரைத்தார். இவை யன்றியும் திவ்விய தேசயாத்திரைசெய்து திருமாலிருஞ் சோலையழகரையும், திருக்கோட்டியூர் நம்பியையும், திரு வரங்கச் செல்வரையும், திருவேங்கடமுடையாரையும் பத்தி யாற் பரவிய பாடல்கள் நெஞ்சை யுருக்குவனவாம்.

'கஜேந்திரன் முதலையாற் பிடியுண்டு விடுவித்துக் கொள்ளமுடியாமல் ஆதிமூலமே என்று ஓலமிட்டழைக் கவே அவ்யானையைக்காத்த மூலகாரணப்பொருளே நானு முமக்கடைக்கலம். சாம்போழ்து அறிவு மயங்குமாகை யால் அப்போழ்து உன்னை துதிப்பது துர்லபமாகும். ஆகையால் அப்போதைக்கு இப்போதே நின்நாமத்தை வழுத்தாநின்றேன் காத்தருள்தி' எனப் பன்முறையாலும் பகவானை வாயார வாழ்த்துவதே மனித வுடலமெடுத்த புண்ணியமெனப் பக்திவழியை மானிடர்க்கு உள்ளங்கை நெல்லிக்கனிபோல விளக்கஞ்செய்தார்.

தம்மை வந்தடைந்த பக்தர்களுக்கு பரந்தாமனது அருளைப் பலவகையாலுந் துலக்கஞ்செய்து திருமாலை கட்டல், திருவிளக்கேற்றல் முதலான பணிவிடைகளில் நிறுவிப் பிரதிதினமும் வடபெருங்கோயிலுடையானுக்கு பாமாலையும் பூமாலையுஞ்சாத்தி காலமெல்லாம் பகவானு டைய பணிவிடைக்கே செலவிட்டு தொண்டர்களுக்குள் அணிப்பொன்னாக விளங்கினர்.

சௌனகாதி முனிவரரே, கேட்டீரோ தொண்டர் பெருமானார் அற்புத சரிதத்தை என சூதமாமுனிவர் நைமி சாரண்ணிய வாசிகளைப் பேரானந்தத் துள்ளிருத்தினர்.

---

# ஸ்ரீ ஆண்டாள் சரிதம்

## ஸ்ரீ ஆண்டாள் அவதாரம்

பகவானுன சூதமாமுனிவர் கூறிவந்த பெரியாழ்வாரது திவ்விய சரிதத்தால் உள்ளமும் உடலமும் பூரித்து பேரானந்தத்துள் அழுந்திய சௌனகாதி முனிவர்கள் அவரைப் பன்முறையும் பக்தியுடன் அஞ்சலிசெய்து அவரை நோக்கி, 'ஓ, மகாத்மா, உமது திவ்விய வாக்கால் பெரியாழ்வாரது அதியற்புத சரிதத்தைக் கேட்டு மகா புனிதரானோம். இனி விண்டுச்சித்தருக்குக் குமாரத்தியாக பூதேவி உலகினில் உற்பவித்த விர்த்தாந்தத்தையும் உமது வாக்காலருளவேண்டும், எனப் பிரார்த்தித்தனர். அங்ஙனமே சூதபுராணிகர் கூறுவாராயினர்.

தெய்வீக சரிதங்களைக் கேட்பதில் மிகுந்த சிரத்தை கொண்ட தபோதனர்காள் கேண்மின். பரந்தாமன் பக்கல் அதிக பக்திகொண்டு பூமாலையும் பாமாலையுஞ்சாற்றி வட பெருங்கோயிலுடையார்க்கு அணுக்குத் தொண்டராய் பெரியாழ்வார் வாழ்ந்துவந்த வில்லிமாநகரம் பூலோக வைகுண்டம்போல் விளங்கி பூமிப்பிராட்டியாரவதரித்தற்கு மிகவும் பொருத்தமான திவ்விய க்ஷேத்திரமாகப் பிரகாசித்தது. இங்ஙனம் வடபத்ரசாயிக்கு கழிபேருவகையுடன் விண்டுச்சித்தர் திருத்தொண்டுபுரிந்து வருங்கால் ஓர்சமயம் திருப்பாற்கடலில் யோகநித்திரைபுரியும் ஸ்ரீமந்நாராயண பகவான் துயிலெழுந்து ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவியாகிய பிராட்டியார் மூவரோடும் திவ்விய சிங்காசனத்திலமர்ந்து அவர்களோடு உல்லாசமாக சம்பாஷித்துக் கொண்டுவரும்போழ்து பூமிப்பிராட்டியார் எழுந்து அவரது திருவடிகளை வணங்கிக் கைகுவித்து நின்று எம்பெருமானை நோக்கி, 'ஓ சுவாமி, அடியாள் கேட்டுக்கொள்ளும்

விண்ணப்பமொன்றுளது, அதனைத் திருச்செவியேற்றருள வேண்டுப்' எனப்பிரார்த்தித்து கூறுவாள்.

'பிரபு, மண்ணுலகில் வாழும் ஜீவர்களுள் எவர்கள் மாட்டுதங்கட்கு விசேஷப்பிரீதி யமைந்துள தென்பதை யடியேன் அறிதற்கு மிகவும் ஆதரங்கொள்ளாநின்றேன், அருளவேண்டும்' என வேண்டிக் கொண்டபோழ்து, பகவான் பூமிப்பிராட்டியரைக் கண்குளிர நோக்கி கடாக்ஷித்து, 'ஏ ஸ்ரீரத்னமே நீ கேட்டுக்கொண்டது மிகவுத்தமமான கேள்வி, மண்ணுலகில் வாழும் மாந்தருள் எவரெவர் பிரபஞ்சவாழ்க்கையை இந்திரஜாலமெனக்கருதி பிரபஞ்சப் பற்றை மனத்தினின் றகற்றி நமது பரமபதத்தில் நாட்டங் கொண்டு நம்பால் பேரன்பைவகித்து அல்லும் பகலும் மறவாச் சிந்தையுடன் பூமாலையும் பாமாலையும் சாற்றி நம்மை வழிபடுவார்களோ அவர்களிடமே நமது முழுப் பிரீதியும் குடிகொண்டிருக்கு' மென வருளிச் செய்தார். இதைக் கேட்ட பிராட்டியார் புளகாங்கிதங்கொண்டு 'ஏ, பகவானே! முன்னரே உலகரக்ஷணார்த்தம் அடியாளைப் புவியில் உற்பவமாம்படி அநுமதி தந்தருளியிருக்கின்றீர். நான் இனிக்காலந்தாழ்க்காது பூமியிற்றோன்றி உமது பணிவிடையையே பேரானந்த வாழ்வாகக் கொண்டவளாகி உத்தமபாகவதர்கள் எத்தகைய கைங்கர்யத்தால் பகவானை உம்மை வழிபட்டு நித்தியவீட்டைக் கிட்டுவாரென்பதை எனது ஒழுக்கத்தாலும் பக்தியாலும் தமிழ்ப் பாமாலைகளாலும் விளக்கமாகக் காட்டிவிட்டுப் பின்னர் திரும்பவும் வந்து பரமபதத்தில் உம்மை வந்தடையா நிற்பேன்' என வேண்டிக்கொண்டனள். ஸ்ரீ பகவான் மற்றும் பிரீதியுடன் அவளை நோக்கி, 'பாவாய், நமது பெரிய திருவடியார் வில்லிபுத்தூரில் அவதரித்து நம்பால் குன்றாத பேரன்பைவகித்து மதுரைக்கு விஜயஞ்செய்து

நமது பரத்துவத்தை நிலைநாட்டிப் பின்னரும் வில்லிநகரை யடைந்து பூமாலையாலும் பாமாலைகளாலும் நம்மை உவப்பிக்கின்றதை நீ யறிவாயன்றே! நீ அவருக்குப் புத்திரியாக அயோனிஜையாய் துளசிச் செடியிற்றோன்றி நீ கருதும் பணிவிடைகளை முடித்துக்கொண்டு திரும்பவும் நம்மை வந்துகிட்டுதி' என ஆக்ஞைசெய்தார்.

அங்ஙனமே, பூர்வம் மிதிலைமாநகரில் ஜனகமகாராஜன் யாகசாலை அமைத்தற்காக யாகபூமியை உழுது பண்படுத்தாநிற்புழி பிராட்டியார் படைசாலிற்றோன்றி ஜனகனுக்குப் புத்திரியாய் சீதையெனும் திருநாமங் கொண்டு அவனது அரண்மனையில் வளர்ந்து வந்ததை யொப்ப, இப்போதும் அந்தப் பிராட்டியாரே விண்டுசித்தர் துளசிமாலையும் மலர்மாலையும் கட்டி பரந்தாமனை வழிபடுவதற்காக வமைத்த திவ்விய நந்தனவனத்தில் பரிமளமிகுந்த ஓர் துளபச்செடியின் மூலத்தில் ஐந்துவயது கொண்ட பால்ய குமரியாக அழகெல்லாந்திரண்டு ஒருருக் கொண்டாற்போல திவ்விய தேஜசோடு விளங்காநிற்ப, அத்தருணம் நந்தனவன கைங்கர்யம் செய்துகொண்டு நின்ற விண்டுச்சித்தர் அந்த திவ்விய சுந்தரியைத் தமது ஊனக்கண்களாற் காணப்பெறவே காந்தத்தாலிழுக்கப் படும் இரும்புபோல் தம்மை யறியாமலே அந்த மகவினிடம் பரவசப்பட்டு 'இவள் பார்மடந்தையோ, பூமடந்தையோ, நப்பின்னைப் பிராட்டியோ ஒன்றுமதெளிகின்றிலேன்' எனப் பெரிதும் ஆதரமெய்தி அக்குழந்தையைப் பேரன்போடு வாரியெடுத்து உச்சிமோந்து பின்னர் 'இது, பகவான் நமக்குப் புத்திரப்பேறின்மையைக் கண்டு நமக்குத் தெய்வீகமாக அருளிய புத்திரியாகும்' என அபிமானித்து மெல்லென இட்டுக்கொண்டுபோய் வடபெருங் கோயிலுடையான் சந்நிதியிற் சேவிக்கச்செய்து பின்னர்

தமது தோள்களிற் சுமந்துகொண்டுபோய்த் தமது மாளி கையைக்கிட்டித் தமது பத்னியாரிடம் கொடுத்தார்.

வானிலூரும் மதியமே கேதுவின் பீடைக்கஞ்சி மண் ணுலகைக் கிட்டியதுபோற்றேன்றிய தெய்வீகக் குழந்தை யைக் கரத்தாற் பரிசித்தமாத்திரத்தில் அவட்கு கொங்கை கள் இரண்டும் பூரித்து பாலமுதம் பீரிட்டடிக்கவே அந்த உத்தமபத்னி அக்குழந்தையை மார்பிறுகவணைத்து முலை யமுதமூட்டி வளர்ப்பாளாயினள். தந்தைதாயர் குழந்தை யின் பேரழகைக்கண்டு தமது குமரிக்குக் கோதையெனும் அருமைத் திருநாமஞ்சூட்டி நாளொருமேனியும் பொழு தொரு வண்ணமுமாகச் சீராட்டிப் பாராட்டி வளர்த்து வருவாராயினர்.

கோதையார் சூடிக்கொடுத்த நாச்சியாரான காதை

சிறு பிராயத்தாளாயினும் கோதையார் தனது தந்தை யார் புரியும் தேவகைங்கர்யங்கட்கு அநுகூலமாகத் தானும் அவருடன் நந்தனவனஞ்சென்று பூஞ்செடிகளுக்குத் தண் ணீர் மாறியும், பின்னர் பிதாவுடன் நறுமலர்களைக் கொய் தும், துளவமாலை மலர்மாலை முதலியன தொடுத்தும் சிறு பிள்ளைகளுக்குரிய வேறு விளையாட்டுகளின்றி பகவத் கைங் கர்யங்களையே தனக்குப் பிரியமான பால்ய லீலைகளாகக் கொண்டு எம்பிரான் பக்கல் உழுவலன்பு மென்மேலும் ஓங்கி வளர்தர பால்யப் பிராயத்தைத்தாண்டி மங்கைப் பருவத்தை யடைந்தாள்.

வயது வளர வளர கோதையார்க்குப் பகவான் பக்கல் அன்புகரைகடந்து உயரவாரம்பிக்கவே, ஓர்நாள் அவள் தனது தந்தையார் துளபமாலைகளையும் பூமாலைகளையும் வடபத்ரசயனருக்காகக்கட்டி அவற்றைத் திருப்பூங்கூடை யில் வைத்துவிட்டு வெளியே போயிருந்த சமயத்தில் கோதையார் அம்மாலைகளைக் கையிலெடுத்து 'எம்பெரு

மானுர்க்கு உகப்பைத்தரும் இம்மாலைகளை நான் முதலிலே சூடி அழகுபார்த்துக்கொடுத்தால் அல்லவோ அவர் பக்கல் பேரன்பைப்படைத்த எனது பரிசத்தால் இவை பரந்தாம னுக்கு விசேஷப்பிரீதியைக் கொடுக்கவல்லனவாகும்' என வெண்ணி அம்மாலைகளுட் சிலவற்றை கழுத்திலணிந்தும் சிலவற்றைக் கூந்தலில் அணிந்தும் பின்னர் கூறையுடுத்து, கைவளை குலுக்கி, கோவைச் செவ்வாய் திருத்தித் தனதழ லைக் கண்ணுடியிற் கண்டு தானே தனக்குள் மகிழ்ந்து பின்னர் அம்மாலைகளைக் களைந்து முன்னம் போற்றிருப் பூங்கூடையிற் பந்தாகச் சுருட்டிவைத்தாள். நடந்த சூதை யறியாத பெரியாழ்வார் என்றும்போல் அம்மாலைகளைக் கொண்டுபோய் அர்ச்சகரிடங் கொடுத்து வடபத்ரசயன ருக்குச் சாற்றிவித்தார் அப்போழ்து பகவான் சந்நிதி யில் என்றுங்காணுத திவ்விய கந்தம் புலப்படவே அர்ச்ச கரும் மற்றவர்களும் பெரியாழ்வாரது பக்தியைக் கொண் டாடி 'நீர் சமர்ப்பித்த மாலைகளிடத்தே பகவான் பூரணப் பிரீதியைக் கொண்டிருக்கின்றூர்' என மகிழ்ந்து கூறினர். பெரியாழ்வாரும் 'ஏதோ இன்று நாம் சாத்திய மாலைகள் வடபத்ரசயனருக்குப் பெரிய உவப்பைத் தந்தனபோலும், ஏதோ இதில் ஓர்விசேஷமுள' தெனவெண்ணிக்கொண்டே தமது திருமாளிகையை யடைந்தனர். அந்நாட் சூடிக் கொடுத்ததைப் போலவே கோதையார் பரந்தாமனுக் குரிய மாலைகளைப் பிரதிதினமும் அங்ஙனமே அணிந்து தந்தையார் வருமுன்னம் அவற்றைக் குடலையில் வைத்து வந்தாள். எம்பெருமான் சந்நிதியிற் பிரதிதினமும் திவ்ய கந்தம் எழுந்து யாவர்க்கும் களிப்பை நல்கிப் பெரியாழ் வாருக்கும் பரமசந்தோஷத்தை விளைவித்துவந்தது.

இங்ஙனம் நிகழ்தரா நிற்கையில் ஓர்தினம் விண்டுச் சித்தர் வழக்கம்போல் திருப்பூங்குடலையைத் தூக்கிய

போழ்து உள்ளிருந்த மாலையில் ஓர் நீண்ட கேசம் சிக்கிக் கொண்டிருப்பதைக் கண்டு மிகவும் வியாகூலங்கொண்டு 'இவ் அநுசிதம் கோதையாலேயே விளைந்திருக்கவேண்டு' மென ஐயுற்று தமது திருமகளை யழைத்து மாலையைக் காட்டி, 'அம்மணி, பகவான் அணியும் மாலையை நீ இங்ஙனமோ குழலில் அணிவது! ஐயோ, பேதாய் இனி இங்ஙனஞ் செய்யற்க' வென மெல்லெனக் கடிந்துகொண்டார். கோதையாரோ, தந்தையார் வார்த்தைகட்கு எதிரொன்றுஞ் சொல்லாது முத்து முத்தாகக் கண்களிலிருந்து கண்ணீரை யுகுத்தாள். தந்தையார் தமது அரும்புதல்வியை இனிது நோக்கி 'கோதாய், நான் உன்னை கடிவேனோ! பகவானுக் கபராதஞ்செய்தல் பெருங்குற்றமன்றோ! உனக்குத் தெரியாதது யாதேயுள' தெனவினிய வசனங்களாற் றமது புத்திரியின் சோகத்தை மாற்றிவிட்டு நந்தனவனஞ் சென்று புதிய மலர்களைப் பறித்துவந்து அவற்றைக் கொண்டு புதிதாக மாலைகளைக் கட்டிக்கொண்டு அவற்றை குடலையிலெடுத்துக் கொண்டுபோய் என்றும்போல் அர்ச்சகரிடங்கொடுத்துப் பகவானுக்குச் சாத்தும்படி செய்தனர். என்றும் கமழ்ந்தெழும் திவ்விய வாசனை அன்று புலப்படவில்லை.

அன்று இராத்திரியில் பெரியாழ்வார் அயர்ந்து நித்திரை புரியுமமையத்தில் பகவான் வடபத்ரசயனர் அவர் கனவிற்றோன்றி 'பிள்ளாய், நீர் இன்று நமக்கணிவித்த மாலைகள் பரிமளம் வீசாமையால் நாம் அவற்றை உகக்கவில்லை. இன்று நீர் அம்மாலைகளுக்குச் செய்த அபராதம் யாது? வெளியிடும்' என்றார். அப்போழ்து விஷ்ணுசித்தர் நடுங்கிய வுள்ளத்துடன் 'எம்பெருமானே, இன்று நான் உமக்குச் சாத்துதற்காகக் குடலையைத் தூக்கும்போது உமக்குக் கட்டியிருந்த மாலையொன்றில் கேசமிருந்ததைக்

கண்டு அவ்வித அனுசிதம் கோதையால் வந்ததெனக் கண்டு எனது குமரியைக் கண்டித்துவிட்டு புதியமலர் கொண்டு வேறுமாலைகள் கட்டிக்கொண்டுவந்து சமர்ப்பித்தேன், எம்பெருமானே இதுவோ நான்செய்த அபராதம்!' என விண்ணப்பித்தார். அப்போழ்து பகவான் புன்முறுவலோடு அவரை நோக்கி, 'ஓ, விஷ்ணுசித்தரே, கோதையார் சூடிக்களைந்துவைத்த மாலையை நமக்கு சமர்ப்பிக்காது வேறு மாலையா நமக்குக் கட்டிக்கொண்டுவந்தீர்; அவள் சூடிக்களைந்த மாலைகளே நமக்குத்தக்க பரிமளமுள்ள உகந்தமாலைகளாம்; அவளை யாரென மதித்தீர்! பூமிப் பிராட்டியே உலகரக்ஷணார்த்தமாக மண்ணுலகில் நீர் செய்த தவத்தால் உமக்குப் புத்திரியாக துளசி மூலத்தினின்றும் உற்பவமானாள். இனி நீர் நாம் அணியும் சகல மாலைகளையும் முதலிலே பிராட்டியாருக்கு அணிவித்துப் பின்னர் நமக்குக் கொண்டுவந்து அவற்றைச் சாற்றும்' என வருளிச்செய்து மறைந்துகொண்டார். தொண்டர் பெருமானார் திடுக்கிட்டெழுந்து 'இந்த அதிதிவ்விய சொற்பனம் இருந்தவாறென்! நமது கோதையோ என்னை ஆண்டாள்' என வியந்துகூறி விடியுமளவும் பகவத்தியானஞ் செய்துகொண்டு பகவான் புரிந்த லீலையைப் பன்முறையுங் கொண்டாடி இரவைப் போக்கினார்.

பகவான் மற்றும் பக்தர்களான உத்தம அந்தணர்கள் கனவிலும் எழுந்தருளி கோதையார் பெருமையை அவர்களுக்கெல்லாம் வெளிப்படுத்தி பிரதிதினமும் அவளுக்கு மாலைகளை யணிவித்துப் பின்னர் அவற்றைத் தமக்குச் சாற்றும்படி' அனுக்கிரகம் செய்து அந்தர்தானமானார்.

விடிந்தவுடன் பெரியாழ்வார் தமது குமரியை அருகழைத்துப் பகவான் தமக்கு வெளியிட்ட இரகசியத்தை கோதையார்க்கு எடுத்துரைத்துத் தமது திவ்விய புத்திரி

யைப் பலவிதங்களாற் கொண்டாடினர். சொற்பன மூலமாக பகவான் அருள் பலருக்கும் வெளியிடப்பட்டிருந்தமையால் உத்தமமான அந்தணர்கள் யாவரும் பெரியாழ்வார் மாளிகையை அணுகிக் கோதையாரைப் பக்தியுடன் தரிசனஞ் செய்துகொண்டு தத்தம் பணிமேற் சென்றனர்.

அன்றுமுதல் சோதையார்க்குச் சூடிக்கொடுத்த நாச்சியாரெனவும் ஸ்ரீ ஆண்டாள் எனவும் பிரசித்தமான நாமம் உண்டாயிற்று. கேட்டீர்களோ, முனிவர்காள் ஸ்ரீ ஆண்டாளது திவ்விய அவதாரத்தையெனச் சூதமாமுனிவர் கூறிய போழ்து, சௌனகாதி முனிவர்கள் உச்சிமேற் கூப்பிய கைகளையுடையவர்களாய்ப் புராணிகரை நோக்கி 'அற்புதம், அற்புதம், இதைப்போன்ற காதையுமுளதோ' வென வுடலம்பூரித்து சூதமாமுனிவரை மற்றும் நமஸ்கரித்து, 'பக்திரசத்தைப் பொழிகின்ற கருணாமேகமே! ஆண்டாள் சூடிக்கொடுத்த நாச்சியாராகிய பின்பு அவள் பகவானுக்குப்புரிந்த பணிவிடைகளையும் எஞ்சிநிற்கும் சரிதத்தையும் திருவாய்மலர்ந்தருளவேண்டுமெனப் பிரார்த்திக்கவே சூதமுனிவர் ஸ்ரீபகவானை மனத்துள் தியானஞ்செய்துகொண்டு ஆனந்தபூரிதராய் அவர்களை நோக்கி கூறுகின்றார்.

### ஆண்டாள் ஸ்ரீதரன்பாற்கொண்ட விரகதாபம்

முனிவர்காள், ஸ்ரீ ஆண்டாள் எம்பெருமான் பக்கல் கொண்டிருந்த பேரன்பை மனத்தானுன்னும் போழ்தே உடலம் மயிர்க்கூச்செறியாநின்றது. அறியாப்பிராயத்தில் ஓர் கன்னிகை அழகும் யௌவனமும் வாய்ந்த கணவனை மணமாலையிடநேரின், அவட்கு தனது மாப்பிள்ளையிடம் உள்ளபடி ஆசையும் நாணமும் அமைந்திருக்குமாயினும் காமரசம் இன்னதென வறியமாட்டாள். பக்குவம் வரவே, அரும்புள் வெளியாகாது மறைவிருந்த கந்தம் அவ்வரும்பு மலராகவே வெளிப்படுமாபோல், கன்னிகையும் யுவதி

யானவளவில் காமரசம் இன்னதெனவறிய வல்லவளாவள். முன் தனது கணவனிடமிருந்த பிரியம் இப்போழ்து காதலாகவமையும், இப்போழ்து கணவனைக்கண்டாலும் ஆனந்தம் எழும், கண்ணுக் கெதிர்ப்படாக் காலத்தில் அவனுருவை நினைப்பினும் உள்ளே ஆனந்தம் விளைதராநிற்கும், அன்றியும் கணவனை நேத்திரங்களாற் பார்த்தாற்போதுமெனவமையாது அவனது பரிசத்தையும் ஆலிங்கனத்தையும் விரும்புவளன்றே! அங்ஙனமே வடபத்ரசயனராகிய ஸ்ரீமந் நாராயணனிடம் அறியாப்பிராயத்தேயே விளைந்த பேரன்பு, ஆண்டாளுக்கு வயது சிறந்து வளர்தலுமே அடங்காமோகமாக மாறியது. கணவனைப்பிரிந்த கற்புடைய மாது 'திரும்ப அக்கணவனை யெப்போழ்து கிட்டப் பெறுவேனோ' வென வேக்கங்கொள்வதை யொப்ப திருப்பாற்கடலில் எம்பெருமானோடு சரசசல்லாபஞ்செய்து சகல பேரானந்த சுகத்தையும் அநுபவித்துவந்த பூமிப்பிராட்டியார் இப்போழ்து மண்ணுலகில் ஆண்டாளாயவதரித்து யுவதிப்பருவத்தையடையவே பரந்தாமனை எப்போழ்து உள்ளபடி கூடவல்லோமெனப் பெரியதோர் மோகத்தாற் ருக்கப்பட்டு மன்மதன் கணைகட்கு இலக்காகினள்.

நவயௌவனம் ததும்பி எழுந்த ஸ்ரீ ஆண்டாளது பேரழகை ஆயிரம் நாவைப்படைத்த ஆதிசேஷனாலுமெடுத்துரைக்கலாற்றாது. அவளது திருமுகமண்டலம் சரற்காலத்து சந்திரனழகையும் பழிக்கத்தக்கதாய் கருணைப்பிரவாகத்தை எங்கணும் பொழிந்தது. கண்களோ ஐயரிபரந்து காதளவோடின; நாசியோ குமிழமலரை வென்றி கொண்டு நின்றது; அதரங்களோ பவளத்தை யடிமை கொண்டன, கொங்கைகளோ கோங்கரும்பை பழித்தன; கைகளோ பைங்காந்தளை மருட்டின. மூவுலகத்துமமைந்த அழகுகளெல்லாம் ஒன்றாகத் திரண்டு ஒருருவங்கொண்டு

வந்ததைப்போன்ற ஆண்டாள் முன்னழகும் பின்னழகும் குடிகொள்ள யாழைப்பழித்த மொழியும், அன்னத்தைப் பழித்த நடையும், மயிலைவென்ற சாயலுங்கொண்டு அலை மகளும் கலைமகளும் மலைமகளும் நாண சொர்ணத்தாற்றீற்றப்பட்ட உயிரோவியமென இம்மண்ணுலகில் விளங்கினள். இவளது குணத்தையும் அழகையுங்கண்டு சிலவந்தணர்கள் பெரியாழ்வாரைக்கிட்டிப் பெண்பேசவந்தனர். விண்டுச் சித்தரோ தமது புத்திரியின் தெய்வீகத்தை யுணர்ந்தவராதலின் அவர்கள் அத்தகைய வார்த்தைகளை பேசுதற்கு மிடங்கொடாது வேறுவிதத்தில் மதியைத்திருப்பி அவர்களை யனுப்பிவிட்டார். பின்னர் ஸ்ரீ ஆண்டாளை எவராலும் வணங்கத்தகும் தெய்வப் பெண்ணெனமதித்து ஒருவரும் பெண்கேட்கத் துணிந்திலர்.

உழுவலன்பினுல் ஸ்ரீமந் நாராயணன் பக்கல் கட்டுக்கடங்காத காதல் பெருகி காயத்தையும் மனத்தையும் வாக்கையும் அந்தப் பகவானது கைங்கர்யத்தும் தியானத்தும் ஜபத்தும் ஏகாக்ரசித்தத்துடன் நிறுத்திய கோதையார் தன்னை புவியிற்பிறந்த சாதாரணப் பெண்போல் மதித்துச் சிலர் தனது தகப்பனுரிடம் பெண் கேட்கவந்த அக்கிரமத்தைத் தெரியவே மிகவும் நடுங்கி அத்தகைய பேச்சை விஷமாகக் கொண்டனள். அக்காலம் யுவதிகள் தாம் காமுறும் கணவரைத் தமக்குத் தப்பாது கிடைக்கும்படி காமவேளைக் கொண்டாடும் வழக்கம்போல் ஆண்டாளும் தனக்குகந்த மணவாளனுக அச்சுதனையே கிட்டும்படி மன்மதனை வேண்டித் தவங்கிடந்தாள். அன்றியும், 'தானோ மாம்ச தேகங்கொண்ட மண்ணுலகமடந்தை ஸ்ரீதரனோ நித்திய வைகுண்டநாதன், அவனை இத்தேகங்கொண்டு காமுறுதல் அபராத' மென வொரோவழி நினைப்பெழுந்த வழியும் தன் தேகமோ தன் வயமிழந்து பரந்தாமனையே

ஆலிங்கனஞ்செய்தற் கொருப்படுகின்றதை நோக்கி மன்மதனை நோக்கி,

வானிடைவாழும் அவ்வானவர்க்கு
மறையவர் வேள்வியில் வகுத்தவவி
கானிடைதிரிவதோர் நரிபுகுந்து
கடப்பதும் மோப்பதும் செய்வதொப்ப
ஊனிடை ஆழிசங்குத் தமர்க்கென்
றுன்னித் தெழுந்தவென் றடமுலைகள்
மானிடவர்க் கென்றுபேச் சுப்படில்
வாழகிலேன் கண்டாய் மன்மதனே

யெனத் தனது கொங்கைகள் அறியாமைவயப்பட்டுதேவர்களுக்காக வைக்கப்பட்ட அவியை கானிடைதிரியும் நரி வந்து வாசனை கொள்வதையொப்ப பரந்தாமனையே அணேவேம் என விம்மி எழுகின்றன. ஏ மன்மதா! இவ்வுடலத்தை மானிடர் மணக்கலாமெனப் பேச்சுப்பிறக்கினும் உயிர்தரியேன் எனக்காமவேளைப் பிரார்த்தனைசெய்து நான் சேசவநம்பியைக் கால்பிடிக்கும் பாக்கியத்தையருள்தி என்றுள்.

ஸ்ரீதரனது உருவத்திலேயே தனது மனதை நிறுத்தி வல்லுயிரைத் தாங்கிநின்ற கோதையார் பூர்வம் பரமபதத்தில் பரந்தாமனேடு அனுபவித்த சரசசல்லாப பேரின்பரசத்தை நினைத்து இப்போழ்து நெடுங்காலமாக அவனது அதரபானங்கிட்டாமைக்கு மிகவும் மனம்நைந்து தாமரைக்கண்ணனது அதரங்களின் சுவை எத்தகையதோவென வேக்கங்கொண்டு, அச்சுவையை அனுதினமுமனுபவிக்கும் பாக்கியங்கொண்டு அவன் வாய் வைத்தூதும் பேற்றைக் கொண்ட பாஞ்சசன்னியத்தை நோக்கி,

கருப்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ!
திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித்திருக்குமோ!

மருப்பொசிந்த மாதவன்றன் வாய்ச்சுவையும் நாற்றமும்
விருப்புற்றுக் கேட்கின்றேன் சொல்லாழி வெண்சங்கே.

என வேண்டிக்கொண்டாள். நிற்க.

மாயைமூடிய மண்ணுலகில் மனித வுடலங்கொண்டு அவதரித்த தன்மையைக்கருதிய ஸ்ரீ ஆண்டாள் மாயைக்கு அப்பாலதாய வைகுண்டத்தில் தேவசரீரத்தோடு அருள் புரிந்துநிற்கும் பரந்தாமனை நேரில் வழிபடுவதினும் அந்தப் பரமபதநாதனே தர்மபரிபாலனத்தின் பொருட்டு இம் மண்ணுலகிற் றோன்றிய மனுஷாவதாரங்களு ளொன்றே தான் காதல் கொள்தற்கமைந்த தெனவுன்னி, அவற்றுள்ளும் ஸ்ரீ கிருஷ்ண விக்கிரஹமே தன் மனத்தைப் பெரிதும் ஆட்கொண்டமையால் ஸ்ரீ ஆண்டாள் அந்த கோபிகாரமணன் பக்கல் தனது மோகம் முழுவதையுஞ் செலுத்துவாளாயினள்.

பூபாரம் தீர்த்தற்காக மண்ணுலகில் அவதரித்த ஸ்ரீ கிருஷ்ணபகவான் தாம் வந்த பணியை முடித்துக்கொண்டு மண்ணுலக வாழ்வினீங்கிப் பரமபதத்திலிருப்பதால் அந்த கிருஷ்ண வடிவத்தை இவ்வுலகில் ஊனக்கண்கொண்டு காணமுடியாதே என்செய்வோம் என மனங்கலங்கி, அந்த பரமாத்மாவின் பரிசத்தால் புனிதமெய்திய ஆயர்பாடி, மதுரை, பிருந்தாவனம், கோகுலம் முதலான திவ்விய க்ஷேத்திரங்களில் வசித்தாலும் சாலும் எனவெண்ணினும் அவை மிகவும் தூரமான பிரதேசங்களாக விருப்பதை நோக்கி மற்றும் மனம் நொந்து ஓர்வகையால் மனத்தைத் தேற்றுவாளாயினள். எங்ஙனமெனில்,

ஸ்ரீ கிருஷ்ணபகவானது திவ்யமங்கள விக்ரஹமே மனத்திற் குடிகொண்ட ஸ்ரீ ஆண்டாளுக்கு, வில்லிநகரே ஆயர்பாடியாயினது; அங்குவாழும் மங்கையர் யாவரும் கோபிகளாயினர்; வடபெருங்கோயிலுடையான் உறையும்

ஆலயமே நந்தகோபனது மாளிகையாயது; வடபத்ரசய னரே ஸ்ரீ கிருஷ்ணபகவானுயினர்; தானே அந்நகரிலுள்ள கோவியருள் ஒருவளாயினள். இங்ஙனம் பாவனையால் தன்னை கோபிகாகன்னிகைகளுள் ஒருவளாக மதித்துக் கொண்ட சூடிக்கொடுத்த நாச்சியார் பூர்வம் கண்ண னது பிரசாதத்தைக்கருதி இளங்கோவியர் (யௌவனம் வாய்ந்த இடைக்குலமங்கையர்) எங்ஙனம் நோன்பு நோற் ருர்களோ அவ்வண்ணமே தானும் மார்கழிநீராடி நோன்பு நோற்று கண்ணனது பெருமை பலவிதத்தாலும் விளங்கு மாறு 'மார்கழித்திங்கள்' எனத்தொடங்கிய முப்பது திவ் விய பாசுரங்களால் திருப்பாவையை உலகினர் யாவரும் ஈடேறும் வண்ணம் அருமைத் திருவாக்கால் வெளி யிட்டாள்.

வேள்வித்தீயில் நெய்யை ஆகுதிசெய்யச் செய்ய அந்த அக்னி நன்ருக ஜ்வலித்து எறிவதுபோல், ஸ்ரீ கண்ணனது திவ்யமங்கள வடிவத்தை நினைக்குந்தோறும் மென்மே லும் ஓங்கிவளர்ந்த விரகத்தைத் தாங்கலாற்ருத ஸ்ரீ ஆண் டாள் பரந்தாமன் பக்கல் தனக்கமைந்துள கற்புநிலை பெண் களுக்கியற்கையாயுள்ள நாணத்தையும் புறங்காணப் பாங்கி யரைவிளித்து 'பெண்ணின் வருத்தமறியாத கண்ணன் அணிந்த பீதகவாடை கொண்டுவீசி அழலையாற்றுங்கள், அல்லாக்கால் அவனணிந்த துழாயை எனது கூந்தலிற் சூட்டுமின், அல்லாக்கால் அவன் ஊதும் தீங்குழலில் நீர் பெய்து அந்தத் தண்ணீரைக்கொண்டு முகத்தை தடவீரோ, அல்லாக்கால் அவன் சுவடுபட்ட தூசியைக்கொண்டு என் னுடலிற் பூசீரோ' எனப் பலவிதத்தாலாற்றி மற்றும் விரக தாபத்தையாற்ருது

உள்ளே யுருகிநைவேனை யுளளோவிலளோ வென்ருத
கொள்ளை கொள்ளிக்குறும்பனைக் கோவர்த்தனனைக் கண்டக்கால்

கொள்ளும்பய னொன்றில்லாத கொங்கைதன்னைக் கிழங்கோடும்
அள்ளிப் பறித்திட்டவன்மார்பில் எறிந்தென்னழலைத் தீர்வேனே

எனச் சொல்லி, 'அக்கண்ணன் என்னை வந்து மார்பிறுகப் புல்லானுயினும் ஓர்தரம் உள்ளபடி என்முன்தோன்றி என் முகத்தை ஏறிட்டுப்பார்த்து ஓர் இனிய வசனம் ஒன்று பேசினும் நான்படும் விரகம் ஓர் சிறிதேனும் ஆறுமே' யெனப் பரந்தாமன் பக்கல் தனக்குநேர்ந்த ஊடலை வெளியிட்டாள்.

இங்ஙனம் இரவும் பகலும் ஸ்ரீ கிருஷ்ண தியானமே பெருவாழ்வாகக்கொண்ட ஸ்ரீ ஆண்டாளுக்கு ஓர் அதி திவ்விய சொற்பனம் உதயமாயிற்று: கண்ணபிரான் தன்னை மணமாலை சூடுதற்காக தோரணம் நாட்டுவதாகவும், கண்ணன் கலியாணப் பந்தருக்குள் நுழைவதாகவும், பார்ப்பனச்சிட்டர்கள் கண்ணனுக்கும் தனக்கும் காப்புக்கட்டுவதாகவும், மதுசூதனன் வந்து தன்னைக் கைப்பிடிப்பதாகவும், கண்ணனும் தானும் அக்னியை வலம் வருவதாகவும், இம்மைக்கும் ஏழேழ்பிறவிக்கும் துணையான கேசவநம்பி தன்காலைப்பிடித்து அம்மிமேல் வைப்பதாகவும், அச்சுதன் கைமேல் தன்கையை வைத்துப் பொரிமுகந்தட்டுவதாகவும், தானும் கண்ணனும் மஞ்சனமாடுவதாகவும் அற்புதமான கனவைக்கண்டு உள்ளமும் உடலமும்பூரித்து விடிந்தபின் தான்கண்ட அற்புத சொற்பனத்தைத் தோழியர்க்குரைத்து ஆனந்தசாகரத்துள் அழுந்திநின்றாள்.

இங்ஙனம் சிறிது தினங்கள் கழியாநிற்புழி ஊனக்கண்கொண்டு கண்ணனைக் காணக்கூடாமையால் தோழியரைக் கூவி 'என்னை ஸ்ரீதரனிருக்குமிடங் கொண்டுபோய் உய்க்க மாட்டீர்களோ!' வெனப்பெரிதும் விரகங்கொண்டாள். பின்னர் விழிப்பிடத்தும் கண்ணன் உரு கண்ணிற்குப் புலப்படவே,

தந்தையுந்தாயு முற்றாரும்நிற்கத்
தனிவழிபோயினுள் என்னுஞ்சொல்லு
வந்தபின்னே பழிகாப்பரிது
மாயவன்வந்துருக் காட்டுகின்றான்

ஆதலின் கண்ணனுக்கென்னை அதிசீக்கிரத்தில் மணமாலை சூட்டுவிக்காவிடின் நானே அவனைத்தேடிச் செல்லவேண்டியதாயிருக்கும், அப்போழ்து நான் பிறந்த குடிக்கு வீணான பழிச்சொல்வராநிற்கும் எனப்பலவாறு தனது அடங்காவிரகதாபத்தை வெளியிட்டாள்.

## ஆண்டாள் திருக்கலியாணம்

தமது அருமைத் திருமகள் கண்ணன் பக்கல் இங்ஙனம் பேரன்புகொண்டு அன்னாகாரமுங் கொள்ளாது நித்திரையின்றி கண்ணனே கண்ணாகவிருப்பதைக்கண்ட பெரியாழ்வார் வியாகூலமாய்த் திருவுளநோக்கம்யாதோவென வெண்ணிக் கண்ணயரும்போழ்து வடபத்ரசயனர் அவர் கனவிலெழுந்தருளி ‘விஷ்ணுசித்தரே, நீர் உமது திருமகளை தந்தப்பல்லக்கி லேற்றிக்கொண்டு அணியரங்கத்தம்மான் சந்நிதிக்குக் கொண்டுபோகக் கடவீர்; அவரே ஸ்ரீ ராஜகோபாலனாக உமது புத்திரியைப் பாணிக்கிரஹணஞ் செய்து கொள்வார்’ என ஆக்ஞாபிக்கவே விஷ்ணுசித்தர் மனம்பூரித்து திருவருளை வியந்துகொண்டு உதயகாலத்தை எதிர்பார்த்து நின்றார். வடபத்ரசயனர் ஸ்ரீ ஆண்டாள் கனவிலும் அங்ஙனமே யெழுந்தருளி அனுக்கிரகஞ் செய்தார்.

பகவான் அருளிய வண்ணமே பெரியாழ்வார் தமது அருமைத் திருமகளாரை தந்தப்பல்லக்கிலேற்றிக்கொண்டு தக்க பரிவாரங்களுடன் திருவரங்கத்திற்கு புறப்பட்டுச்சில தினங்களில் காவிரியின் கரையைக்கிட்டினார். ஸ்ரீ ஆண்டாள் ‘இனி நாம் வாகனமின்றி காலால் நடந்துசென்று எம்

பெருமானை தரிசிக்கவேண்டு',மென நினைத்தமாத்திரத்தில் எம்பெருமானர் பிராட்டியாரது குறிப்பைபறிந்து 'நடந்து வரின் பாதம் நோவும்' எனவுன்னித் தமதருளால் அந்த க்ஷணமே ஆண்டாளைத் தம்மிடம் வரும்படி செய்யவே ஸ்ரீ ஆண்டாள் அரவணைமேற் பள்ளிகொள்ளும் திருவரங்கச் செல்வனைக் கண்டு நமஸ்கரித்து மண்ணுலகவாசிகளும் காணும் வண்ணம் உதறியுடுத்த பட்டுச்சேலையும், பருத்த செங்கழுநீர் மாலையும், நெற்றியில் கஸ்தூரித்திலகமும் பிரகாசிக்க கைவளையல் ஒலிக்க திருவடிகளின் சிலம்புகள் அரற்ற அன்னமென்னடைகொண்டு நாகவணையை மிதித்தேறித் திருவரங்கச் செல்வனைக்கிட்டி அவனது திருவடிகளிலே உருக்கரந்து அவனது பாதபங்கயத்தை வருடும் பாக்கியத்தைப்பெற்ருள்.

இஃதிங்ஙனமிருப்ப, சிவிகையைத் தாங்கிச் சென்ற போகிகள் பல்லக்கில் பாரங்குறைந்ததைக்கண்டு ஆழ்வாருக்குத் தெரிவிக்க விண்டுச்சித்தர் உடனே சிவிகையைத் திறந்து பார்த்தபோழ்து நாச்சியாரைக்காணுது திகைத்து 'இது பகவான் செய்தமாய' மெனவெண்ணிக் கடுகென நடந்து அழகிய மணவாளன் சந்நிதியையடைந்து தலையிற் கூப்பிய கைகளுடன் 'எம்பெருமானே, உமது மாயத்தை நானே ஆழங்காணவல்லவன்! ஆண்டாளைக் காட்டியருளும்' என விண்ணப்பஞ்செய்யவே, எம்பெருமான் புன்முறுவலுடன் 'ஆழ்வாரே, இதோ உமது புத்திரியுறைகின்ருள், பாரும்' எனக் கோதையாரைக்காட்டவே பெரியாழ்வார் உள்ளம்பூரித்து மற்றும் பகவானை நமஸ்கரித்து 'சுவாமி, உமது செயல் அதிமானுஷியமாக விருக்கிறது. எனது புத்திரியை நீர் கண்ணன் வடிவோடு ஸ்ரீ வில்லிபுத்தூருக்கெழுந்தருளிப் பாணிக்கிரஹணஞ்செய்து என்னை ஆட்கொண்டருளவேண்டு' மெனப்பிரார்த்தித்தார்.

அழகிய மணவாளன் விண்டுச்சித்தரை மிகப்பிரீதியுடன் நோக்கி, 'ஓய், ஆழ்வாரே நீர் கேட்டுக்கொண்ட வண்ணமே நாம் ஸ்ரீ ராஜகோபாலன் வடிவோடு வில்லிநகரை யடைந்து உமது திருமகளாரை மணமாலை சூடுவோம், நீர் உமது புத்திரியைத் திரும்பவும் வில்லிநகருக்கு இட்டுக்கொண்டு செல்லும். பங்குனி உத்தரத்தில் நாம் அவண் வந்து திருக்கல்யாணஞ் செய்துகொள்வோம்' எனவனுமதி கொடுத்தார்.

அழகிய மணவாளனது கட்டளையைச் சிரமேற்றாங்கிப் பெரியாழ்வார் பிராட்டியாரைச் சிவிகையி லேற்றிக்கொண்டு பரிவாரங்கள்சூழ ஸ்ரீ வில்லிபுத்தூரை வந்தடைந்தார். பகவான் அருளிய விஷயத்தைக் கேட்ட நகரத்தார் வீட்டிலும் விவாக மகோத்சவம் நடப்பதுபோல் யாவரும் அவரவர் தத்தம் இல்லங்களை யலங்கரிக்கவே ஸ்ரீ வில்லிபுத்தூர் அமராவதியினும் மிக்க வெழிலுடன் விளங்கிற்று. பங்குனி உத்தர நக்ஷத்திரத்தை யாவரும் ஆவலுடன் எதிர்பார்த்திருந்தனர். பெரியாழ்வார் தமது மாளிகையை தேவேந்தர சபைபோல அலங்கரித்து ராஜகோபாலனது வரவை ஆவலோடு எதிர்பார்த்து நின்றார். ஸ்ரீ ஆண்டாளுக்குண்டான குதூகுலத்தை எவரே எடுத்துரைக்கவல்லார்! பங்குனி உத்தரம் பிறந்தும், ராஜகோபாலன் வராததைக் கண்ட ஆண்டாள் கருடத்தியானஞ் செய்தலுமே பெரிய திருவடிபிராட்டியார் முன்தோன்றி அவளது அனுமதிபெற்று வாயுவேகத்திலும் கடியவேகங்கொண்டு திருவரங்கத்தைக்கிட்டி அழகிய மணவாளனைக்கண்டு 'சுவாமி, இங்ஙனங் காலந்தாழ்ப்பின் எனது தாயார் சகிப்பளோ' வெனக்கூறி ராஜகோபாலனது உருவத்தைக் கொண்ட அரங்கமன்னனைத் தோளிலேற்றிக்கொண்டு ஒரு முகூர்த்தத்திற்குள் வில்லிநகரை யடைந்தார். ராஜகோபாலனது

வரவால் அப்போழ்து வில்லிநகரம் பூலோக வைகுண்டம் போல் விளங்கியது.

நல்ல ஓரையில் பெரியாழ்வார் நீர்வார்த்துக்கொடுக்க சகல ஜனங்களும் தேவசமூகங்களும் அறிய ஸ்ரீ ராஜகோபாலன் வண்ணமாய் வந்த அரங்கமன்னன் ஸ்ரீ ஆண்டாளைப் பாணிக்கிரஹணஞ் செய்தார். தேவர்கள் மலர்மழை பொழிந்தனர், தேவதுந்துபி முழங்கிற்று.

அப்போழ்து அரங்கமன்னன் ஆழ்வாரைக்கொண்டாடி 'பூர்வம் ஜனகராஜன் எனக்கு மாமனாரானதுபோல் இக் கலியுகத்தில் நீரும் எனக்கு மாமனாரானீர்' எனவினிய வசனங்கள் கூறிமகிழ்வித்து, மற்றும் விண்டுச்சித்தரை நோக்கி 'ஓ, ஆழ்வாரே நீர் நம்மையும் நாச்சியாரையும் கருடாழ்வாரையும் ஏகாசனத்தில் அர்ச்சா வடிவமாக வமைத்து நித்தியபூஜையும் திருவிழாக்களும் ஒழுங்காக நடத்திக்கொண்டு வாக்கடவீர்; உலகத்தாரது க்ஷேமார்த்தமாக நாம் நித்திய சந்நிதிபண்ணிக் கொண்டிருப்போம். பின்னர் உம்மைப் பரமபதத்திற்கு வரவழைத்துக் கொள்வோம்' என்றருளி ஸ்ரீ ஆண்டாளோடு யாவரும் வியக்க அந்தர்தானமானார்.

பகவான் ஆக்ஞாபித்த வண்ணமே விண்டுச்சித்தர் அரங்கமன்னனாரையும் நாச்சியாரையும் கருடாழ்வாரையும் திவ்விய விக்ரஹகங்களமைத்து ஏகாசனத்திலேழப்பண்ணி நித்திய பூஜையும் திருவிழாக்களும் ஒழுங்காக நடத்திக் கொண்டு வடபெருங்கோயி லுடையானுக்குகந்த நந்தன வன கைங்கர்யத்தையும் செவ்வனே நடாத்தி எண்பத்தைந்து சம்வற்சரம் மண் ணுலகில் பகவத் பக்தியைத் தெற்றென விளக்கிப் பழுத்தவயதில் ஸ்ரீ தானுலகை யடைந்தார்.

பூமிப்பிராட்டியார் உலகிற் பிறந்த கதையைக் கூறினோம். இனி வராகக்ஷேத்திரத்திலமைந்துள தீர்த்தங்

களின் பெருமையைச் சிறிது விளக்குவோம் என்றனர்.

### தீர்த்தங்கள்

ஸ்ரீ ஆண்டாளது திவ்விய சரிதத்தால் மகா புனிதர்களான சௌனகாதி முனிவர்கள் சூதபுராணிகரைப் பலவாற்றாலுங்கொண்டாடித் தீர்த்த மகுத்துவத்தைக் கேட்பதில் சிரத்தையைவைத்த ஏகாக்ரசித்தத்துடன் மகாபுராணிகரது வசனங்களைச் செவியேற்பாராயினர்.

சூதமாமுனிவர் அவர்களை இனிது நோக்கிக்கூறுவார்: உத்தமசீலங்கொண்ட முனிவர்களே ஸ்ரீவில்லிநகரையடுத்த தீர்த்தங்களுள் பன்னிரண்டு மிக்க விசேஷங்கொண்டன. கங்கை யமுனை சரஸ்வதியாகிய மூன்று திவ்விய நதிகளும் ஒன்றுகூடிய திருமுக்குளத்தின் மகிமையை முன்னமே கூறினும்.

ஸ்ரீ ஆண்டாள் எழுந்தருளியிருக்கும் மாளிகையிலுள் கண்ணாடித் தீர்த்தம் என்பது கூபவடிவாயமைந்துளது. ஆண்டாள் தன்னழகைத்தானே கண்டு ஆனந்தித்த தீர்த்தம் இதுவே.

வடபெருங்கோயிலுடையானது சந்நிதியில் ஓர் தீர்த்தமுளது. இதுவே விஷ்ணு தீர்த்தமெனப்படும்.

மண்டூக பருவதத்தின் கொடுமுடியினின்று ஓர் அருவி பொழிகின்றது. இதிலே நீராடிய மகிமையால் மண்டூகமுனிவருக்கு சாபவிமோசனமாகி தவளையுருவம் நீங்கி பழயபடி மனிதவுருவம் பெற்றார். இதுவே முன்னரே நாம் கூறிய மண்டூகதீர்த்தமாகும்.

அன்றியும் சண்பகாரண்ணியத்தின் மத்தியிலோடுகின்ற நதி ஐந்து பிரிவுகளாகி பஞ்சதீர்த்தங்களாயமைந்தன. அவை,

வாசிஷ்டதீர்த்தம்—இது தெற்கிலுள்ளது,
வித்தியாதரதீர்த்தம்—இது வடக்கிலுள்ளது,

அவ்வியதீர்த்தம்—இது வாசிஷ்டதீர்த்தத்திற்கயலேயுள்ளது,
அப்சரதீர்த்தம்—இது வித்தியாதரதீர்த்தத்திற்கயலேயுள்ளது,
லோகபாலகர் தீர்த்தம்—இதுவே மத்தியிலுள்ள தீர்த்தம்.

ஸ்ரீ வில்லிநகருக்கு வடக்கில் அதிவிசேஷமாக இரண்டு தீர்த்தங்களுள. அவற்றுள் ஒன்று, கண்ணுவதீர்த்தம் (இதுவே தற்காலம் ரங்கதீர்த்தமெனக் கொண்டாடப்படுகின்றது.) இந்த திவ்விய தீர்த்தம் ரங்க பர்வதத்திலுள்ளது. இந்தப் பருவதத்திலிருந்து அருவி வடிவாய்ப் பாய்வதுவே கண்ணுவதீர்த்தமாகும். இத்தீர்த்தத்தில் கண்ணுவமுனிவருக்கு சிஷ்யரான ரங்கமகாரிஷி தவஞ்செய்து மோக்ஷம் பெற்றார். இதுவும் மற்றை தீர்த்தங்களும் மாந்தர்க்கு இஷ்டகாமியங்களைத் தரவல்லனவாம்.

ஸ்ரீ வில்லிமாநகருக்கு நேர்வடக்கில் இரண்டு நாழிகை வழி தூரத்தில் ரங்கபர்வதத்தின் கன்னிமூலையில் அதியற்புதமான திவ்விய குன்றமுளது. (இதுவே தற்காலம் திருவண்ணாமலை எனப்பெயர் பெற்று விளங்காநின்றது) இஃது ஆதிசேஷனே பர்வதாகாரமாக திருவேங்கடநாதனைத் தாங்குதற்காகக்கொண்ட கோலமாம். பக்தர்கள் எவரும் எளிதில் உய்யும் வண்ணம் பரமபதநாதன் இக்குன்றத்தின் சிகரத்தில் வெங்கடாசலபதியாய் பக்தஜனங்களுக்கு அவரவர் வேண்டும் வரங்களை அனுக்கிரஞ் செய்துகொண்டு நித்தியவாசஞ்செய்கின்றார். இந்த மகாபுண்ணிய பர்வதத்தின் அடிவாரத்தில் தாமரை நெய்தல் முதலான புஷ்ப ஜாலங்கள் நிறைந்தவோர் புண்ணியதீர்த்தம் புஷ்கரணி வடிவங்கொண்டு விளங்காநின்றது. இதுவே பம்பைசரஸ் (இதுவே [பம்பையே] தற்காலம் கோனேரிதீர்த்தம்) எனப் பெயர் பெற்றுளது. இஃது சேதனர்களாகிய மாந்தரது பாபங்களைப்போக்கி அபீஷ்டங்களைக் குறைவற நல்கவல்லது. இதுவே, அமலையெனச் சிலராலும், கமலையெனச்

சிலராலும், நின்மலேயெனச் சிலராலும், உற்பலேயெனச் சிலராலும் கொண்டாடப்படுவது. சில பெரியோர் இந்த திவ்விய தீர்த்தத்தை விஷ்ணுவல்லபை எனக்கூறுகிற்பர். நோயுற்றோரும் பேயுற்றோரும் வரங்கிடந்து நோன்பு நோற்று விமோசனம் பெறுதற்கியன்ற தலமுமாம். மகப் பேறில்லாதார் திருவேங்கடமுடையானை வழிபட்டு இஷ்ட சித்திகளை எளிதிற்பெறும் தலமும் இதுவே. இந்த அதி திவ்விய பர்வதத்தை கிரிபிரதக்ஷஞ் செய்வோர் சர்வா பீஷ்டங்களையும் அடைந்து நோயற்ற வாழ்வையும் குறை வற்ற செல்வத்தையும் பெற்று நீண்ட ஆயுளோடு வாழ்வர்.

ஓ, முனிவர்காள் தீர்த்தமகிமையை இயன்றவாறு உங் கட்கு எடுத்துரைத்தேன்.

## பலன்

இந்த ஸ்தலபுராணத்தையும் தீர்த்த மகிமையையும் கேட்பவரும், படிப்போரும், எழுதினோரும், இந்த மான்மி யத்தில் சிரத்தையை வகித்தவரும் சர்வபாபவிமோசன ராய், நோயற்றவர்களாய், தீர்க்காயுளோடு வாழ்வார்கள். பகைவரேனும், கிரஹதோஷமேனும், பசிப்பிணியேனும், தரித்திரமேனும் இவர்களைப் பீடியாது. இம்மான்மியத் தைக்கேட்ட மாத்திரத்தில் தீர்க்காயுளும் ஆரோக்கியமும் தனதான்யாதி அஷ்டைஸ்வரியங்களும் புத்திரசம்பத்தும் இனிதேவிளையும்.

திருவாடிப்பூரத்துச் செகத்துதித்தாள் வாழியே
திருப்பாவை முப்பதுஞ்செப்பினாள் வாழியே
பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளை வாழியே
பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாள் வாழியே
ஒருநூற்றுநாற்பத்தொரு மூன்றுரைத்தாள் வாழியே
உயரரங்கர்க்கே கண்ணியுகந் தளித்தாள் வாழியே
மருவாரும் திருமல்லி வளநாடி வாழியே
வண்புதுவை நகர்க்கோதை மலர்ப்பதங்கள் வாழியே.

ஸ்ரீ ஆண்டாள் திருவடிகளேசரணம்.

---

# விளம்பரம்.



இதனுல் சகலமானவர்களுக்கும் தெரிவிப்பதென்னவென்ருல் எமது புக்ஷாப்பில் பள்ளிக்கூடங்களுக்கு வேண்டிய சகலமான புஸ்தகங்களும் காப்பி, நோட்புக் முதலானவைகளும், வைஷ்ண கிரந்தங்கள், வைத்தியம், ஜோஸ்யம், மாந்திரீகம், வேதாந்தசித்தாந்தம், ஆறுமுக நாவலர் புஸ்தகங்களும், இன்னும் வேண்டிய புஸ்தகங்களும் அடியில் கண்ட எங்களிடம் பெற்றுக்கொள்ளலாம்.

உபாத்தியாயர்களுக்கும் வியாபாரிகளுக்கும் தகுந்த கமிஷன் கொடுக்கப்படும்.

---

எமது விலாசம்:—

T. சுப்பிரமணிய பிள்ளை.

புக்ஷாப்,

ஸ்ரீ வில்லிபுத்தூர்.